*Kumaran̲*

*Āram 7, muttu 42*

*June 12, 1930*

Record no. 313

Reg. No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் ௭ } காரைக்குடி பிரமோதூத-ஞு வைகாசி-மீ ௩௦-உ வியாழக்கிழமை (12—6—1930.) { முத்து ௬௨.

# ஓர் புதிய கடை

## காரைக்குடி, கல்லுக்கட்டி வடகரையில் ஸ்தாபனம்.

எலிமெண்டரிஸ்கூல், ஹைஸ்கூல், பாடபுஸ்தகங்களும், அட்டண்டன்சு, அட்மிஷன் வகையரு ரிஜிஸ்தர்களும், நோட் புஸ்தகங்களும் கடைகளுக்கும், வேண்டிய குரிப்புபேரேடு சிட்டை புஸ்தகங்களும், ஸ்டேஷனரி சாமான்களும், நவீன நாவல் புஸ்தகங்களும், கிரந்த புஸ்தகங்கள் மற்றுமுள்ள லைப்ரெரி புஸ்தகங்களும்.

பெட்ரோமாக்ஸ், லயிட்டு ஸ்பேர் சாமான்களும் எலக்டிரிக் டார்ச் லயிட்டு, பல்பு, பாட்ரிகளும்.

அசல் சிவபுரி புகையிலை பல ரகங்களிலும் நயம் பீட்டன் பாசுகினால் தயார் செய்த வாசனைப் பாக்கும், கொட்டப்பாக்கும்,

மொத்தமாகவும் விலை சரசமாகவும் கிடைக்கும்

உபாத்தியாயர்களுக்கும் மொத்த வியாபாரிகளுக்கும் தக்க கமிஷன் கொடுக்கப்படும்.

(36) **A. N. S. & Co., Karaikudi.**

## K. நாகலிங்கம் & பிரதர்ஸ்,

**எலக்டிரிக் வயரிங் கண்டிராக்டர்ஸ்.**

**41 கீழ ஆவணி மூலவீதி,**

**மதுரை.**

தங்கள் வீடு, பங்களா, முதலியவைகளுக்கு எலக்டிரிக் வயரிங் போடு முன் எங்களிடம் கலந்து சொல்லுங்கள். நாங்கள் இத்தொழிலில் நீண்டகால அனுபவம் வாய்ந்தவர்கள், தங்கட்கு குறைந்த விகிதத்தில் குறிப்பிட்ட காலத்தில் திருப்திகரமாக உத்திரவாதத்துடன் செய்து கொடுப்போம். எனவே ஒரு முறை எங்களிடம் ஆர்டர் கொடுத்துப் பார்க்கவும். வெளியூர் ஆர்டர்களை மிக்க கவனத்துடன் தேர்ச்சிபெற்ற ஆட்களைக் கொண்டு செய்து கொடுப்போம்.

சகலவித எலக்டிரிக் சாமான்கள் குறைந்த விலைக்கு எங்களிடம் கிடைக்கும். விபரத்திற்கு மேற்கண்ட விலாசத்துக்கு எழுதவும். (26)

## இடம் மாற்றம்.

ஆஸ்பத்திரிரோட்டில் 448 நெ. கட்டிடத்திலிருந்த எங்கள் காரியாலயத்தைகல்லுக்கட்டி மேல்கரை கணேசர் மெடிகல்ஹாலுக்கு அடுத்துள்ள கட்டிடத்தில் மாற்றியிருக்கிறோம் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறோம். நமது வாடிக்கைக்காரர்களை இனிமேல் புது காரியாலயத்துக்கே வரும்படி வேண்டுகிறோம்.

**ராவல் அண்டு கம்பெனி,**

(13) காரைக்குடி, பிராஞ்சு.

20—5—30.

**A PERFECT BUST**

பெண்களுக்கு

## அழகு எது?

"ROBUSTOL" வைத்திய உலகிற்கே புத்தப் புதிது.

இவ் ஔடதத்தை உபயோகிக்கும் ஒவ்வொரு பெண்மணிகட்கும் அழகிய நல்ல மார்பை அளிப்பது. மகளிர் ஒவ்வொருவரின் முதற் கடமை அழகுக் கனிகலனுகிய தம் மார்பைப் பாதுகாப்பதேயாகும் இவ் வசியமான புது முறை பெண்களின் சிறிதாயுள்ள மார்பைப் பெருத்து விம்மச்செய்யும். வசீகரமற்ற மார்புடைய பெண்கள் வியப்புறுமாறு சிறிது நேரத்தில் அழகுவாய்ந்த மங்கையராய் மாறுகின்றனர். ஒரு மாதத்தில் 5000 புட்டிகளுக்குமேல் விற்றுவிட்டன. அதன் அதிசய குணங்களைக் கண்டு மருத்துவர்களும் மயங்குகின்றனர்.

இன்றே ஒரு புட்டியை வரவழைக்கவும். கடிதங்கள் ரகசியமாக வைத்துக் கொள்ளப்படும். முழுவிபரங்கட் கெழுதவும். விலை ரூ 4—0—0தான் தபால் செலவு வேறு. அயல்நாட்டுக்கு அட்வான்ஸ் ரூ. 6-0-0 வி. பி கிடையாது விலாசம் (28)

Mons V. PADMA Kalyan Niwas Building. Post No. 19 BOMBAY.

பழநி, சி. எம். சாமி,

## குருதாம்பர பஸ்பம்.

சகல வியாதிகளுக்கும் கைகண்டது.

தீராத திமிர், குஷ்டம், சூலை, மதமதப்பு, தடிப்பு, பத்து, கிரந்தி, ஆராத குழிப்புண், குறைநோய், ரணங்கள் முதலிய வியாதிகளும் கண்டிப்பாய் தீரும்.

100 வேளை பஸ்பம் விலை ரூ. 50. 50 வேளை பஸ்பம் ரூ 25.

ஏழைகளுக்குப் பாதி விலை.

ஏராளமான நற்சாட்சிகளை விவரமான கியாட்லாக்கில் பார்க்கலாம்.

வைத்திய ஆசிரியர். **சி. மலையப்பசாமி,**

**நித்தியானந்த வைத்தியசாலை பழநி, S.I.** (52)

## படம் பிடிக்கும்

கைக் காமெரா.

அதிசயமான புது ஆங்கில அற்புதம்!

உண்மையான புகைப் படம் பிடிக்கும், கருப்பு செயற்கை தோலினுல் மூடப்பட்டு விசேஷ மெஷிஸ்கஸ் திருஷ்டிக் கண்ணுடி யுடைய சிறந்த காமெரு. க்ஷண நேர மூடிகள். 4x3 அங்குல அளவுப் படங்கள் பிடிக்க உத்தரவாதம். நீங்களே சுலபமாய்ப் பிடித்துக்கொள்ள குறிப்புடன் அனுப்புவோம். உடனே உபயோகிக்கலாம். விலை ரூ. 5 மட்டுமே. தபாற்கூலி வேறு.

BHARTIYA DAWAKHANA

Ferozepore City (7) Punjab.

(75)

சுதேச கைத்தொழிலை ஆதரியுங்கள்.

இந்தியரால் இந்திய கைத்தறியில் செய்யப்பட்டது.

## பெனாரஸ் பட்டுப் புடவை.

நேர்த்தியான உடை, அழகான சிறு ஜரிகை கரை, ஜரிகை முகதலை தினப்படி துவைத்துக்கட்ட சிலாக்கியமானது. நாகரீகத்தை விரும்பும் ஸ்திரீகளுக்கு இது மிகுந்தசந்தோஷத்தைக் கொடுக்குமென்பதில் தடையில்லை. சொற்பச்சேலைகளே கைவசமிருக்கின்றன. உடனே எழுதுங்கள் கண்ணைக்கவரும் பலவித இங்கிலீஷ் கலர்களிலும் கிடைக்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 12 முழம் | x 44 | புடவை | 1-க்கு | விலை ரூ. 28/- |
| 16 முழம் | x 44 | ,, | 1-க்கு | விலை ரூ. 38/- |
| 18 முழம் | x 44 | ,, | 1-க்கு | விலை ரூ. 45/- |

பெரிய கேட்லாக் இனும்.

**கே. எஸ். முத்தையா கம்பெனி,**

சில்க் ஹவுஸ் ஸ்ரீ காசி.

☞ இந்தப் பத்திரிகையைக் குறிப்பிட்டு ஆர்டர் கொடுப்போருக்கு நம் இந்தியத் தலைவர்களின் படங்கள் 4 இனமாய் அனுப்பப்படும்.

(47) K. Muthiah & Co, Benares.

தேகாரோக்கியம்
திரண்டசெல்வம்
தீர்க்காயுள்

## இவைகள் எங்கள்

மதன மஞ்சரிமாத்திரை

களை உபயோகிப்போருக்கு உண்டாகின்றன. மேலும் மேற்படி மாத்திரைகள் பலஹீனம், ஞாபகக்குறைவு, மலச்சிக்கல, நரம்புகளின் தளர்ச்சிமுதலிய வியாதிகளை சுஸ்தமாகக் கண்டிக்கின்றன.

40மாத்திரைகளடங்கிய டப்பி 1-க்கு விலை ரூபா 1.

விவரமான கேட்லாக் இனும்.

மதனமஞ்சரி பார்மஸி

(54) மதராஸ்.

ஏஜெண்டு:— சம்பத் கம்பெனி

தெப்பக்குளம், திருச்சி.

வாரப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௩-0-0
ஆறு மாதம் ௧-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. ௪-0-0




"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௧-௮-0
வெளிநாடு வருடம் ஒன்றுக்கு ௨-0-0
தைமீ வருடாரம்பம்

"கதரே உயிர்"

"கருணையே தெய்வம்"

# தமிழ் நாடும் சங்கீதக் கலையும்.

ராம. சுப்பிரமணியம்.

நமது தமிழ்நாட்டில் சங்கீதக்கலை இது காலை எந்நிலையிலிருக்கிறது என்பதையும், அதில் பிராமணர் பிராமணரல்லாதாருக்குப் புரிந்துவரும் கஷ்ட நஷ்டங்கள் எவ்வளவு என்பதையும், சங்கீதக் கலையில் ஈடுபட்டிருக்கும் பிராமணரல்லாத வித்வான்கள் தங்கள் மரியாதையை எந்த அளவு பெற்றுவருகிறார்களென்பதையும், எந்தெந்த இடங்களில் இழிவுபடுத்தப் பெறுகிறார்கள், அதை எவ்வாறு நிவர்த்தி செய்து கொள்வது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

ஃ ஃ ஃ

சங்கீதக்கலையானது இன்று ஆதரிப்பாரின்றி வீழ்ந்துகிடப்பதை ஒருசிலர் தான் உணருகிறார்கள். மற்றையோர் உணராவிடினும் குறை சொல்வதற்குத் தயாராயிருப்பதுதான் இக்கலைவளர்ச்சியுறுதற்கு முக்கியகாரணமென்று சொல்வது மிகையாகாது. ஒரு அன்பரிடம் நான் பேசிக்கொண்டிருந்தபொழுது உங்களுக்குச் சங்கீதப் பயிற்சியுண்டா என்று கேட்டேன். அவர் "நான் பயிற்சி செய்யவில்லை, ஆனால் கேட்டு ஆனந்திக்கும் பாக்கியம் பெற்றிருக்கிறேன்" என்றும், ஒருவருக்கு சமையல் செய்யத் தெரியாவிடினும் சமைத்திருப்பதை உண்டு அதன் தன்மையை தெரிவிக்கமுடியுமென்றும் கூறினர். அந்த அளவில் நான் மகிழ்ச்சி அடைந்தேன். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு விஷயத்தைப் பத்திரிகையில் கண்டு ஆச்சரியமும் வருத்தமும் அடைந்தேன். அது சங்கீத மகாநாடு ஈரோட்டில் கூட்டுவது பற்றியதாகும். ஷை மகாநாடு கூட்டுவது அனுவசியமென்றும் பழங்கதைகளை உதாரணங் கூறியும் எழுதப்பட்டிருந்தது அந்த அன்பர் தமக்கு சங்கீதத்தில் வெறுப்பு ஏற்பட்டதிலிருந்து உலகத்தையே சங்கீதத்தில் வெறுப்பு ஏற்படும்படி செய்துவிடலாமென எண்ணினாரோ என்னமோ யானறிகிலேன்.

ஃ ஃ ஃ

சமைக்கவும் தெரியாது, சமைத்ததை உண்டு களிக்கவும் தெரியாது என்று சொல்லுகிற ஒருவர் இருப்பார் என்பதை நான் அன்றுதான் அறிந்தேன். இவர் கூற்றைப்பற்றி இதோடு நிறுத்திக்கொள்ளுவோம்.

ஃ ஃ ஃ

சங்கீதத்தை ஒருவர் கற்க வேண்டுமானால் அவர் படும் அவஸ்தை சொல்லி முடியாது. சங்கீதத்தைக்கற்பவர் பெரும்பாலும் ஏழைமக்களேயாவர். அவர்கள் ஒரு வித்வானின் தயவை நாடி, அவர்கள் சொல்வதற்கெல்லாம் கீழ்ப்படிவதோடு தனக்கு நல்ல சாரீரமும் ஆர்வமும் இருந்தால்தான் சங்கீதத்தைக் கற்க வசதியேற்படும். இந்த வசதிகளோடு அவர்கள் கற்று வந்து பல வருடங்கள் ஆனவுடன் பல தனவந்தர்கள் தயவும் வித்வான்களின் தயவும் வேண்டியிருக்கின்றன. பின்னர் சில வருடங்கள் இலவசமாக சபைகளிலும் மற்ற பொது இடங்களிலும் உயிரைப் பிடித்துக்கொண்டு பாடவேண்டும். இதற்குள் வித்வானுக்கு சுமார் நடு வயதிற்குமேல் ஆகிவிடக் கூடும். இதுவரை ஒரு சிறு தொகை கூட சம்பாதிக்கமுடியாது.

ஃ ஃ ஃ

இதுசம்பந்தமாக ஒரு அளவு கடினமாகக்கூட இருக்கலாம். இந்த நிலையில் தன்னை ஒரு பாடகன் அல்லது சங்கீதக் கருவிகளை இயக்கவல்லன் என்று நிர்த்தாரணம் செய்து கொள்வதற்கு ஒரு பிராமணன் தயவும் எதிர்பார்க்கப்படுகிறது பிராமணன் தயவும் கிடைத்து பல வசதிகளும் கிடைத்தாலும் பாட்டுக் கச்சேரிக்கு ஒப்புக்கொண்ட சில தினங்கள் முன்னரே வயாதியஸ்தன் பத்திய முறை அனுஷ்டிப்பதுபோல் பாடுந்தினம் வரை பல உணவுப்பொருள்கள் நீக்கப்பட வேண்டும். அப்படியிருந்தால்தான் அக்கச்சேரியை நன்றாக நடத்த முடியும்.

ஃ ஃ ஃ

ஆக இவ்வளவு கஷ்டங்களை அடைந்து சங்கீதக்கலை வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டுப் பல சங்கீதவித்வான்களையும் ஒன்று கூட்டி சங்கீதக் கலை தமிழ்நாட்டில் எவ்வாறு இருக்கிறது என்பதைக் காண முயலுவார்களாயின். இசை பாடும் விக்தை. என்று விரோதிகள் எதிர்ப்பிரசாரம் செய்ய முன்வருகின்றனர். மேலும் இக்கலைக்குப் பிராமணர்கள் கூறும் குறைபாடுகளைக் கூறிமுடியாது. தனக்கு ஒருவர் பிடிவில்லையாயின் அவர் இசையாற்றுபவரைத் தாக்குவதிலேயே கருத்தைச் செலுத்தி, இவருக்குச் சாரீரம் கட்டை என்றோ, இவரால் மேலே பாட முடியவில்லை என்றோ, இவருக்கு லய சுத்தமில்லை என்றோ இவருக்கு ஞானம் போதாது என்றோ, இவர் நன்றாகப்பாடுகிறார் ஆனால் கர்வி என்றோ சொல்லி இன்னும் பலமாதிரியான பொறுப்பற்ற துர்ப்பிரசாரங்கள் ஆங்காங்கே புரிந்து பாடகன் முன்னேற முடியாதபடி செய்து விடுகிறார்கள். இது போன்று கலைக்கு உலைவைக்கும் மக்கள் கூட்டம் என்று ஒழியுமோ அன்றுதான் சங்கீதக்கலை வளர்வதற்கு முடியுமென்று கூறலாம்.

ஃ ஃ ஃ

இங்கிருக்கும் சங்கீதத்தை வளர்க்கத் தெரியாமலோ அல்லது வேறு உதவி பெறுவதை முன்னிட்டோ ஒரு பிராமணரை ஜர்மனிக்கு அனுப்பி சங்கீதம் கற்றுவரச் செய்திருப்பதாகக் கூறப்படுகிறது. இதைக்கண்டு தமிழ் நாட்டுச்சங்கீதத்தின் தற்கால நிலையை நன்கு அறிந்த ஒருவர் வருத்தப்படாமலிருக்க முடியாது. நமது சங்கீதத்தில் எல்லாதேச சங்கீதங்களும் அடங்கியிருக்கின்றனஎன்பதை 'குறுகியபுத்தி' என்று ஒருவர் கூறத்துணிகின்றார். இந்தியாவில் எல்லாப் பொருளையும் ஆக்கிக்கொள்ள வகையுண்டு ஆகலால் நம் நாட்டைப்பண்படுத்தும்வரை அந்நியப் பொருள் வேண்டாமென்று கூறுவது குறுகிய புத்தியில்லையா என்று கேட்கலாமா? தவிர சங்கீதமென்பதே இன்னதென்றறியாதவர்கள் அதைப்பற்றிப் பேசுவது அசம்பாவிதமென்பதை நம்மில் பலர் கருதுவதில்லை. இதனாலேயேஎல்லா இயக்கத்திலும் வளர்ச்சித்தடையேற்படுகின்றது.

ஃ ஃ ஃ

உண்மையில் ஒருவருக்கு சங்கீதத்தில் விருப்பமிருக்குமாயின் அவர் தமிழ்நாட்டுச்சங்கீதத்தின் தன்மையை தெரிந்திருப்பாராயின் ஜர்மனி சங்கீதத்தைக் கனவிலும் கருதியிருக்கமுடியாது. தமிழ்நாட்டுச் சங்கீதம் பல்லாயிரக் கணக்கான ராகங்களையுடையதாகும். மக்களுக்கு இனிமைபயக்கவல்ல பல அம்சங்கள் தமிழ்நாட்டுச் சங்கீதத்தில் மலிந்திருக்கின்றன. எந்த நிலையிலுள்ள ஒருவராயிருந்தாலும் சரி அவருக்கு தமிழ்நாட்டுச் சங்கீதத்தைக் கொண்டு எந்த விதமான உணர்ச்சியை வேண்டுமானாலும் உண்டுபண்ணிவிடலாம்.

ஃ ஃ ஃ

தெள் விளிச் சிறியாழ்ப் பாணர்
தேம்பிழி நறவை மாந்தி
வள் விசிக் கருவி பம்ப
வயின் வயின் வழங்கு பாடல்
வெள்ளி வெண் மாடத் தும்பர்
வெயில் விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை
யின்றுயி லெழுப்பு மன்றே.

(கம்பர்)

தமிழ் நாட்டுச் சங்கீதத்தினால் ஒரு ஜீவனைத் துயில வைக்கலாமென்பதை தாய்மார்கள் காண்பித்தார்கள். கம்பரோ துயிலெழுப்பவும் செய்யலாமென்ற உண்மையை உணர்த்துகின்றார். ஒருவன் குதூகலத்தோடு இருக்கவேண்டுமாயினும் அல்லது சோகம், வீராவேசம், பொறுமை, போன்றவைகளில் ஆழவேண்டுமாயினும் அது தமிழ்நாட்டுச் சங்கீதத்தினால் முடியுமென்பது உறுதி.

ஃ ஃ ஃ

திரு. சுப்பிரமணிய பாரதியாரின் சுதேச கீதம் முதற்பாகத்திலுள்ள 'வந்தேமாதரமென்போம் எங்கள் மாநிலத்தாயை வணங்குது மென்போம்' என்ற பாட்டை 'நாத நாமக்கிரியை' என்ற ராகத்தில் சரியான முறையில் ஒருவன் பாடினால் சுற்றியிருப்பவர்கள் புத்துணர்ச்சி பெறாமலிருக்க முடியாது.

ஃ ஃ ஃ

ஒருவர் தமிழ் நாட்டுச் சங்கீதத்தில் ஈடுபட்டு நிற்பாரேயாயின் அவர் இரக்கம் என்ற ஒன்றை நிச்சயமாகப் பெற்றிருக்க வேண்டும். இன்றேல் அவர் உண்மையான சங்கீதத்தை உணராதவராக இருக்கக் காணலாம்.

ஃ ஃ ஃ

ஒருவருக்கோ பலருக்கோ சிரமத்தைத் தணித்துக் கொள்ளுவதற்கு தமிழ்நாட்டில் சங்கீதத்தைப் போல் உதவுவது வேறொன்றுமில்லை. பெரிய கல் ஒன்றை உயரமான இடத்தில் சேர்ப்பிக்கப்படும்பொது அதைத் தூக்கிச் செல்பவர் அது காலை பாட்டுக்கள் பாடி வினையாற்றுவதை பலரும் கண்டிருக்கலாம்.

ஃ ஃ ஃ

இவ்வளவு உயர்ந்த சங்கீதத்தைத் தமிழ்நாட்டில் வைத்துக் கொண்டு வளர்க்க வழிதெரியாமலும் சர்வகலாசாலையில் ஏற்படுத்தியிருக்கும்சங்கீதக் கல்லூரிக்கு கேவலம் பன்னிரெண்டு மாணவர்களை அனுப்பிவைத்தும் திகைத்து நிற்கும் தமிழ்நாட்டிற்கு புத்தகத்தை தாங்குங் கால்களின் மேல் வைத்துக்கொண்டு பார்த்து பாடம் ஒப்பிக்கும் ஜர்மனியரின் சங்கீதம் தேவைப்பட்டது விந்தையேயாகும்.

ஃ ஃ ஃ

தமிழ் நாட்டில் சங்கீதக்கலை வளர்ச்சியுற வேண்டுமாயின் முதலாவதாக ஜாதி வித்தியாசம் வேரோடு ஒழிய வேண்டும் எவராயிருந்தாலும் அவர் கற்ற அளவு மரியாதை செலுத்த வேண்டும். கற்றவருக்கு மரியாதை என்பது எல்லாத் துறைகளிலும் பிராமணருக்குக் கிடைத்ததுபோல் இத்துறையிலும் கிடைத்துவருவது கவனித்தற் குரியது.

ஃ ஃ ஃ

ஒரு பிராமண பாகவதர் சுமார் பதினைந்து வருடத்திற்கு முன்பு கதை

## மகாத்மாவின்றி மகாநாடில்லை.

சமீபத்தில் மகாத்மாஜியின் இயக்கத்தின்பால் ஆதரவைக்காட்டும் பொருட்டு பம்பாய் பார்ஸிகளால் ஓர் ஊர்வலம் நடத்தப்பெற்றது. ஊர்வலம் எஸ்ப்ளநேட் மைதானத்திலிருந்து குவாலியகுள மைதானம் முதலிய முக்கியவீதிகள் வழியாகசென்றது. ஊர்வலம் புறப்பட்டபோது கூட்டத்தில் சுமார் ௨௦,000 பார்ஸிகளும் ௨000-பெண்களும் கலந்திருந்தனர். ஆனால் சிறிது நேரத்தில் ஊர்வலத்துடன் ஏராளமான இந்துக்களும் மகம்மதியரும் வந்து கலந்துகொள்ளவே கூட்டம்அதிகரித்தது. ஊர்வலத்தின் முன் மகாத்மாஜி நாரிமான், தாதாபாய், சர்பிரோஷா மேத்தா ஆகியோர்படங்கள் பூக்களாலும் கத்தரினாலும் அலங்கரிக்கப்பட்டு கொண்டு போகப்பட்டன. அவற்றின் பின்னால் "மகாத்மாஜி இன்றேல் மகாநாட்டின்று" "மகாத்மா ஏற்படாலன்றி சமரசமேற்படாது" "சமாதானமின்றி இந்தியாவை ஆளமுடியாது" என்ற வாக்கியங்கள் தீட்டப்பெற்ற கொடிகள் பிடிக்கப்பட்டிருந்தன. கூட்டத்தில் இடையிடையே "மகாத்மாகாந்திக்கு ஜே" என்றும் "சீமைத் துணியை பகிஷ்கரியுங்கள்" என்றும் கோஷம் செய்யப்பட்டது.

---

### ஜப்பான் வியாபாரிகள் சங்கத் தீர்மானம்.

அன்னியநாட்டுத் துணி பஹிஷ்காரம் நாளுக்கு நாள் வலுவடைந்து வருவதால் சென்ற மாதம் ௨௯-ந்தேதி நடந்த ஜப்பான் ஷாங்கே பட்டுவியாபாரிகள் சங்கக்கூட்டத்தில் மேற்படி சங்கம் தீர்மானிக்கும்வரை எந்தச்சங்க மெம்பரும் எந்த விதமான வெளிநாட்டுத் துணிகளும் ஜப்பான் ஷாங்கே, ஹாங்காங் ஆகிய இடங்களிலிருந்து வாங்கவும் வரவழைக்கவும் கூடாதென்றும் மீறி நடக்கிறவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

செய்த பொழுது கதை மத்தியில் 'தோட்டியுந்த பூக்கடிக் குரான் வாயிதாவுக் கென்ன செய்குவோய்.' என்றும "கூடார வண்டி கட்டி" என்றும் இதுபோன்ற பாடமுடியாத இலச்சலஞ் செறிந்த பாடல்களை தமது திருவாயினல் பாடினர். அவர்கள் இன்னும் அந்தப் பாட்டைக் கேட்கமுடியாதோ என்று கவலைப்படவேண்டாம். இன்றும் அந்தப் பாட்டைத்தான் திரும்பத்திரும்பப் பாடிக்கொண்டு வருகிறார். ஒரு கதைக்கு அன்பு ரூபாய் நூறு. இன்று ரூபாய் எண்ணூறு. இராமாயண ஸிரீஸ் வைக்கிறதாயிருந்தால் ரூபாய் பதினெண்ணாயிரம். இதை ஒரு அன்பர் இது எப்படிக் கொள்ளையாகும; கொடுத்ததைத்தானே வாங்கிக்கொள்கிறார் என்றார். வாசகர்கள் எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்.

இன்னொரு பாகவதர் இருக்கிறார். இதே தொகைக்குக் குறைய வாங்கமாட்டார். அதிகமாகப் பாடாவிடினும் தனது மேனியை ஜனங்களுக்குச் சதுராட்டமூலமாகக் காண்பித்துச் சிரிக்கவைப்பார். சங்கீத உலகத்தை காப்பாற்றுவதில் தனக்கு மிஞ்சியவனில்லை என்றார் கதை மத்தியில் அடிக்கடி சொல்லிக் கொள்ளுவார். இம்மாதிரிப் பாகவதர்கள் உடம்பில் ஜாதிப் பித்தம் எவ்வளவு ஏறியிருக்கிறதென்று கணக்கிட்டுரைக்க முடியாது.

(தொடரும்)

## மே கடைசியிலும் ஜூன் ஆரம்பத்திலும் சிறைப்பட்ட தியாகிகள்.

| பெயர் | கைது செய்யப்பட்ட இடம் | கைது செய்யப்பட்ட நாள் | கைது செய்யப்பட்ட சட்டம் | தண்டனைக் காலம் |
|---|---|---|---|---|
| டாக்டர் பத்லி வாலா (சூரத்) | தர்சனு | மே 27 | உப்புச் சட்டம் | 9 மாதம் |
| N A நாஹரி பாரிக் | ,, | மே 28 | 145 | 12 |
| அம்பலால் பட்டேல் | | மே 28 | 145 | 6 |
| டாக்டர் திருபுவன தாஸ் | | மே 28 | 145 | 6 |
| திரு B V தாகோர் | ,, | மே 30 | 145 | 6 |
| திரு சினய் (சூரத்) | | மே 29 | 117 | |
| திரு M V அபயங்கர் | நாகப்பூர் | ஜூன் 3 | 124 A | 30 |
| திரு வாமன்ராவ் ஜோஷி (பீரார்) | அமராவதி | ஜூன் 3 | 124 A | 30 |
| திரு இந்துபூஷண சகாவர்த்தி | கிருஷ்ண நகர் | மே 28 | 144 | |
| மகாவீர சிங் | காசி | மே 28 | 124 A | |
| ஸ்ரீமதி மித்ர | லட்சுமண புரி | மே 31 | 145 | 6 |
| முனீந்திரநாத் தேவ் | சில்ஹட் | மே 29 | | |
| பண்டித நீலகண்ட தாஸ் (மாஜி எம். எல். ஏ.) | புரி | மே 31 | 117 | |
| திரு அத்தல் சந்திரகுமார் | மால்டா | மே 30 | 117 | 15 |
| பனிபூஷணதாஸ் குப்தா (முக்தி ஆசிரியர்) | | | | |
| கோவிந்தபிரசாத் சின்ஹா | பங்கூரா | மே 27 | 151 | |
| சதீஷ்சந்திர ராய் | தினாஜபுரி | மே 27 | 342 | 6 |
| ஜிவன்லால் பண்டிதர் | பூராபஜார் | மே 27 | | |
| தாரிணி சமாரதத் | | மே 27 | | 3 |
| பிரபாத சந்தர கங்குலி | வங்காளம் | மே 27 | ,, | |
| சதீஷ் ராய் | | | | |
| சௌத்திரி (தேசர்பானி ஆசிரியர்) | நோவாக்காலி | மே 27 | | |
| மதுராமோகன் சக்ரவர்த்தி | ,, | ,, | | |
| ஹரன்சக்ரகோஷ் சௌத்ரி | ,, | ,, | 117 | 6 |
| ஜே என் சஹானி | டில்லி | | 117 | 6 |
| D D. சர்மா | ,, | | 108 | 12 |
| ரய்சதா ஹன்ஸ்ராஜ் | ஜலந்தர் | மே 28 | | 12 |
| சர்தார் ஹிரசிங் | ,, | ,, | ,, | |
| ஸ்ரீமதி அமர் காவுர் | ,, | மே 28 | | |
| திரு எ வி பாலி | லாகூர் | மே 29 | 108 | |
| தேசபக்தாரி துவுரி சப்பமான் | ராஜமுந்திரம் | மே 31 | | 6 |
| திரு கனகையா | பெஜவாடா | ஜூன் | | 6 |
| சர்தார் சாதுல்சிங் | லாகூர் | ஜூன் 3 | | |
| பூர்ணமித்திரர் | கல்கத்தா | | | 12 |
| மௌல்வி | பாரிட்பூர் | ஜூன் 31 | 08 | 12 |
| காமிலுதின் அகமது | ,, | ,, 1 | 24 | 12 |
| திரு வசந்தகுமார்முஜூம்தார் | கல்கத்தா | ஜூன் 4 | 157 | |
| திரு மல்லையா | தான்கு | ,, | | |
| திரு பாவையா | குண்டூர் | ஜூன் 5 | | |
| திரு சுப்பாராவ் | குண்டூர் | ,, | | |
| திரு சப்பத்துக் குமாரர் | ,, | ,, | | |
| திரு ஜயராம சாஸ்திரி | ,, | ,, | | |
| திரு சின்ன ஹனுமையா | ,, | ,, | | |
| திரு கிரிந்தாநாதர் | பாரிட்பூர் | ஜூன் 6 | 117 | |
| ஷண்முகலால் | பர்டோலி | ,, | | |
| திரேந்திர சந்திரர் | டாக்கா | ,, | | |

### ராஜிநாமாச் செய்தோர்.

திரு காகர் ஸ்ரீனிவாசராவ் மங்களூர் சென்னைச் சட்டசபையிலிருந்து ராஜிநாமாச் செய்தார்.

| | | |
|---|---|---|
| பண்டித ராஸ்விகாரி திவாரி | ஐக்கியமாகாண | ,, |
| திரு சௌத்ரி பகவத் | பீஹார் | ,, |
| பிரசாத மகாபத்ர | ,, | ,, |
| போஜசிங் பாலஜனி | பம்பாய் | ,, |
| லால்சந்து நவல்ராய் (சூரத்) | டில்லி | ,, |
| ரயிசதா பகத்ராம் (பாஞ்சாலம்) | ,, | ,, |

இதுவரையிலும் டில்லி சட்டசபையிலிருந்து ராஜிநாமாச் செய்துவிலகினோர் 29. கௌன்ஸில் அப் ஸ்டேட்ஸ் (அரசாங்கசபை) யிலிருந்து நீங்கினோர் 8. கபிரா ஜில்லா காங்கிரஸ் புள்ளட்டிடி 1824 கிராம உத்தியோகஸ்தர்கள் குர்ஜாத்தில் வேலையை ராஜிநாமாச் செய்திருப்பதாகத் தெரிகிறது.

---



## இராமநாதபுரம் ஜில்லா கோவில் கமிட்டி நோட்டீஸ்.

இதனால் சகலமான ஜனங்களுக்கும் தெரிவிப்பதென்னவென்றால் இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள இந்துக் கோவில்களைப் பற்றியாவது, அவைகளின்நிர்வாகத்தைப்பற்றியாவது, அவைகளின் உத்தியோகஸ்தர்களைப் பற்றியாவது இவ் வாபீசிற்கு ஏதாவது மனுச் செய்யவேண்டுமானால் கீழே குறிப்பிட்டிருக்கும் இந்த கமிட்டியின் அங்கத்தினர்களின் ஒருவர் மூலமாவது, அல்லது கீழே கையொப்பமிட்டிருப்பவரின் நேரிலாவது செய்துகொள்ளவேண்டுமாறு கோரப்படுகிறார்கள். இதன்றித் தபால்மூலம் அனுப்பப்படும் மகஜர்களையும் மனுக்களையும் கவனிக்கப்படமாட்டாது என்பதையும் தெரிவிக்கலாயிற்று.

அங்கத்தினர்களின் ஜாப்தா.

1. மகா-ள-ள-ஸ்ரீ A A. P. P. கோபால கிருஷ்ணசாமி நாய்க்கரவர்கள், அருப்புக்கோட்டை.
2. ,, செ. முருகப்பா அவர்கள் காரைக்குடி.
3. ,, டி. எஸ். கந்தசாமி முதலியாரவர்கள் சாத்தூர்.
4. ,, வ. ஸ்ரீனிவாசய்யங்கார் அவர்கள் சிவகெங்கை.
5. ,, N. B. சிவகாமிநாதபிள்ளை அவர்கள் ஸ்ரீவில்லிபுத்தூர்.
6. ,, எம். ராஜம் நாயுடுகாரு இராமநாதபுரம்.
7. ,, P. A. P. அழகராஜா அவர்கள் இராஜபாளையம்.
8. ,, V. T. M. சுந்தரதாஸ் தேவர் அவர்கள், எழுமலை வத்ராப்போஸ்ட்.
9. ,, P. R. S சொக்கப்ப செட்டியாரவர்கள் சத்ரம் செட்டியாபட்டி, விருதுநகர் போஸ்ட்.

சிவகெங்கை 26-5-30 } S. Ramachandran பிரசிடெண்ட்.

---





## கல்வியின் அருமை.

(மிஸ் கே. தங்கம்மாள் எழுதுவது:—)

கல்வி என்னும் சொல்லுக்குப் பொருளென்னையெனின், நம்மனத்தின் கண் இருக்கின்ற அறியாமையிருளைக் கல்லி (நீக்கி) அறிவைவிளக்குவது என்பதாம். இப்பதம் கல் என்னும் பகுதியடியாகப் பிறந்தவி என்னுந்தொழிற்பெயர் விகுதிபெற்றுகல்வியென்றாகிற்கிறது. கல்வி ஒளியைப்போலவும், கல்லாமையிருளைப்போலவும், இருக்கின்றன. கல்வி கற்காதவர்களது மனத்தில் அறியாமையென்னும்இருள்மூடிக் குடிகொண்டிருக்கிறது என்பதற்கு ஆட்சேபமில்லை. அறியாமையை நீக்குவதற்குக் கல்வியே தகுந்த கருவியாகும். கல்வியின் அருமையை எவராலும் கூறமுடியாது. அது ஒன்றே அழிவற்ற பொருள் உலகில் யாவருக்கும் இம்மை மறுமை இன்பங்களைக்கொடுப்பது கல்வியே.

"அறம் பொருளின்பம் வீடும்
பயக்கும் புறங்கடை
நல்லிசையும் நாட்டும்
—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங்
கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க்குற்றதுணை"

என்று நீதிநெறி விளக்கத்திற் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் விலைமதிக்கவியலாதகருந்தனமாகியகல்வியைகற்காமலிருப்பது வெகு புத்தியீனமாம் திருவள்ளுவரும் 'என்னொருவன் சாந்துணையுங் கல்லாதவாறு' என்று கல்வியின் பெருமையை நோக்குமிடத்து வியப்புடனும் திகைப்புடனும் கூறுகின்றார். செல்வப் பொருளினும் கல்விப்பொருளே சிறப்புடையது.

"கடைநிலத்தோராயினுங்
கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்து வைக்கப்படும்"

"மன்னனும்மாசறக் கற்றோனும்
சீர்தூக்கில்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—
மன்னற்குத்
தன்தேசமல்லாற் சிறப்பில்லை;
கற்றோர்க்குச்
சென்றவிடமெல்லாஞ் சிறப்பு"

"கற்றோர்க்குக் கல்விநலனே கல[னல்லான்
மற்றோணிகலன்வேண்டாவாம்முற்ற
முழுமணிப்பூணுக்குப் பூண்
[வேண்டார்யாரே
அழகுக் கழகுசெய்வார்"

உயர்குலமும், அழகும், செல்வமும், உடையவராயினும், கல்வியில்லாதவர் முருக்கம்பூவுக்குச் சமமாவர். செல்வப்பொருள் கள்வர், வலியவர், அரசர், என்னும் இவர்களாலே கொள்ளப்படும். கல்விப்பொருளோ ஒருவராலும் கொள்ளப்படமாட்டாது. செல்வப்பொருள் வெள்ளத்தாலாயினும், அக்கினியாலாயினும், அழியும். கல்விப்பொருளோ ஒன்றாலும் அழியமாட்டாது. கல்லாதார் எக்காலத்தும் செல்வமுடையவராயிருத்தலரிது. ஏனெனின், கல்லாதாரது பொருள்பிறரால் கவரப்படினும், வேறுவழிகளிற் கேடுறினும், அப்பொருளை அவர் மீண்டும் பெறலரிது. கற்றோர் செல்வத்தை யிழப்பினும் மீண்டும் கல்வியினுதவியால் அதனை எளிதாகப்பெறுவர். செல்வப்பொருள் பிறருக்குக் கொடுக்குந்தோறும், குறைந்துகொண்டேவரும். கல்விப்பொருளோபிறருக்குக்கொடுக்குந்தோறும், பெருகிக்கொண்டேவரும். ஒரு பெரியவைச்சார்ந்து அறியாதவைகளையெல்லாம் அறிந்தோம் என்று உலகத்தார் பலரும், அவரிடத்து அன்புடையவராவர். ஒருவனுக்குக் கல்வி கற்பித்தல், அவ்வொருவரிடத்திலே பலரும், அப்பலருள்ளும், ஒவ்வொருவரிடத்திலே பற்பலருமாக எண்ணில்லாதார் கல்விகற்றுக்கொள்வதற்கு ஏதுவாகும். ஆதலின் வித்தியாதானத்துக்குச் சமானமே தருமம் யாதொன்றுமில்லை.

"கல்வி கரையில கற்பவர்நாள் சில
மெல்ல நினைக்கிற்பிணிபல"

வியாதி, வறுமைகள், இல்லாமையும், பொருள் இளமை உள்ளமையும கல்விகற்றற்குச் சிறந்த கருவிகள் ஆதலின் கல்வியைச் சிறுபிராயத்திலே கற்கவேண்டும். சிறு பிராயத்திலே கற்ற கல்வி புத்தியிலே நன்றாய் பதியும். சமுசாரசாகரத்திலே விழுந்துவருத்தத்தை அடைந்துகொண்டிருக்கும் முதிர்ந்த பிராயத்திலே கற்றாலும் கல்வி நன்றாய்ப் புத்தியிலே பதியமாட்டாது. ஆதலினன்றோ ஔவையார் "இளமையிற்கல்" என்று அருளிச்செய்தார். சோர்வு அடையாமல், நாடோறும் கிரமமாகக் கற்கின்றவர் எப்படியும் அறிவுள்ளவராவர். மணற்கேணியைத் தோண்டுந்தோறும் ஊற்று நீர் சுரந்து பெருகிக்கொண்டே வருதல்போலக் கல்வியைக் கற்குந்தோறும், அறிவு வளர்ந்துகொண்டேவரும். கல்வியுடையவர் தாங் கற்றறிந்தபடி நல்வழியில் ஒழுகுதல் வேண்டும். நல்லொழுக்கமில்லாவிடத்துக் கல்வியினாற்பிரயோசனமில்லை.

"முற்று முணர்ந்தவரில்லை முழுவது[உங்'
கற்றன மென்று களிப்பற்க"
"கற்றது கைம்மண்ணளவு
கல்லாதது உலகளவு"

புலவர்களும் தாங்கள் அதிகங் கற்றுவிட்டோம், என்று தற்பெருமை கொள்ளாதிருக்கவேண்டும். இந்த உலகத்திலுள்ள சிருஷ்டிகள் யாவற்றுள்ளும் மனுஷனுக்கு மாத்திரம் பகுத்தறிவுண்டு. கல்வி கற்காதவனிடத்திற்காணப்படும் பகுத்தறிவானது மிகக்குறைவானது. அவன் நன்மையின்னது தீமையின்னது என்றும், சரியின்னது பிழையின்னது என்றுஞ், சரியாய்ப் பகுத்தறிந்து கொள்ள மாட்டான். கல்விச்சிறப்பு இருளில் உள்ளவருக்கு வெளிச்சம் போலுமல்லவா?

"கண்ணுடையர் என்பர் கற்றோர்
முகத்திரண்டு, புண்ணுடையர்
[கல்லாதவர்"

எனத்திருவள்ளுவரும், கல்வியின் அருமையை வியந்துரைத்திருத்தலைக் காணலாம்.

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப
இவ்விரண்டுங் கண்ணென்ப
[வாழுமுயிர்க்கு"
கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே"

என்பது ஆண்பாலாருக்கு மாத்திரமல்ல. பெண்பாலாருக்கும், பொருந்தும். ஆதலின் ஆண், பெண், என்னும் இருபாலாரும், தங்கள் வாழ்நாளை வீணாக்காது கல்வியைச்சிறிதும் அவமதியாது வருந்திக கற்பார்களாக.

---

## உலக விநோதங்கள்.

இங்கிலாந்தில் விவாகமாகாத வாலிபப் பெண்கள் ௨௦-லட்சம் பேரிருக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

ருஷியாவில் ஒரு மாதத்தில் 5 வாரமிருக்கும்படியான காலண்டர்கள் தயார் செய்ய யோசனை செய்துவருகிறார்கள்.

ஃ ஃ ஃ

கானடாவுக்கும் லண்டனுக்கும் உள்ள பிரயாணத்தை ௨ நாளில் முடிக்கும்படியான முயற்சி நடந்துவருகின்றது.

ஃ ஃ ஃ

சிப்பிகள் உப்பு நீரில்தான் வசிக்குமாம். ௪000-க்கு ஒரு பங்காவது நீரில் உப்புக் கலந்திருக்கவில்லையெனின் அவைகளுக்கு அத்தண்ணீரில் வசிக்க முடியாதாம்.

ஃ ஃ ஃ

வீடுகளில் திருடர்களைப்பற்றி எச்சரிக்க உபயோகித்துவரும் ஓர்வித இயந்திரங்களை வைத்தியத்தில் வேட்டைநாய்களைப் பழக்குவதற்கும் உபயோகித்துவருகிறார்கள்.

ஃ ஃ ஃ

பாரிசிலிருந்து ஹாவ்லேக்குப் போகும் ரயில்வண்டிப் பிரயாணிகட்கு ஆகாயவசனி மூலம் செய்திகேட்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

சரியான பாதரட்சைகளை உபயோகிப்பதால் இருதயரோகம் வராமல் தடுக்கக் கூடுமென்று டாக்டர் ஜாக்கே அபிப்பிராயப்படுகிறார்.

ஃ ஃ ஃ

மேனாட்டுப் பெண்கள் நிர்வாண ஆடை எவ்வளவுக்கெவ்வளவு பெருகுகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு தேகாரோக்கியம் பெருகுமென்று சர் வில்லியம் ஆர்பத்நாட் அபிப்பிராயப்படுகிறார்.

ஃ ஃ ஃ

பிரான்ஸில் நோயல் என்ற பெயருள்ள ஒரு கனவான் ஒரு போஸ்ட்கார்டில் ௫௦00-வார்த்தைகளை எழுதினர். இதற்குமுன் ஒரு அமெரிக்கர் அதே அளவு போஸ்ட்கார்டில் ௩௨௦௫-வார்த்தைகளை எழுதியதுண்டாம்.

ஃ ஃ ஃ

௧௯௨௯-ம் வருடம் நியூயார்க்கில் மோட்டாரில் அகப்பட்டு இறந்தவரின் கணக்குப்படி சராசரி தினசரி ௩-பேர் இறந்தனரென்றும் ௩௨-பேர் காயமடைந்தனரென்றும தெரிகிறது.

ஃ ஃ ஃ

இவ்வருடம் இங்கிலீஷ் கால்வாய் நீந்தல் போட்டிக்குச்செல்லும் ஸ்ரீமதி ஆக்னஸ் நீகஸ் என்னும் பெண்ணை இதுவரையிலும் ௯௦-பேர் விவாகஞ் செய்யும்படிகேட்டிருக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

ருஷிய சர்க்காருக்கு ஜர்மன் இஞ்ஜினீயர்கள் சமீபத்தில் செய்துகொடுத்த ஒரு இஞ்ஜின் இரண்டாமுறை எண்ணெய் தண்ணீர் இவையின்றி ஓரேயடியாய் ௪000-மைலோடும் சக்தியைத்ததாம்.

ஃ ஃ ஃ

பொய்ப்பல் கட்டுவது போல் கண் பார்வை இழந்தவர்களுக்கு வெளியில் கண்ணாடி போடுவதற்குப் பதிலாக கண்ணுக்குள்ளேயே கண்ணாடிகட்டும் முறையை ஜெர்மன் டாக்டர் வியோ போல்ஹெய்ம் என்பவர் கண்டுபிடித்திருக்கிறார்.

ஃ ஃ ஃ

திறமையான சங்கீதத்தில் பறவைகளின் தொனியும் வனவிலங்குகளின் கர்ஜனையும், சமுத்ர ஆடு முதலியவைகளின் சத்தம் சப்தமும் தேனியின் ரீங்காரமும் கொசுவின் இரைச்சலும் அடங்கியிருக்க வேண்டுமென்று சங்கீத நிபுணர்கள் அபிப்பிராயப்படுகின்றார்கள்.

ஃ ஃ ஃ

புடாபெஸ்ட் என்றவிடத்தில் சர்வதேச அம்பட்டர் போட்டி நடந்தது. அதில் ஒருவர் ௩௨ வினாடிக்குள் ஒருவருக்கு க்ஷவரஞ் செய்து முடித்துவிட்டார். இதற்குமுன் நடந்த போட்டியில் வேறொருவர் ௩௬ வினாடிக்குள் க்ஷவரம் செய்து முடித்தார். ஆகவே இவருக்கு உலகில் பெயர்வாய்ந்த அம்பட்டர் என்றபட்டம் அளிக்கப்பட்டது.

ஐரோப்பாவில் ஏராளமான குரங்குகள் வசிக்குமிடம் ஜீப்ரால்டர்; ஓநாய்கள் வசிக்குமிடம் ஜுக்கோஸ்லேவேகியா.

ஃ ஃ ஃ

ருஷியாவில் வடபாகங்களிலுள்ள டன்ட்ரான் என்னும் சதுப்புநிலங்களில் வளரும் மரங்களுக்கு இரண்டடிதான் உயரம் இருக்குமாம்.

ஃ ஃ ஃ

பிலிப்பைன் தீவுகளைச் சேர்ந்த லிவட்டில் சமீபத்தில் அடித்த காற்றால் ௩௪ நகரங்கள் அழிந்தனவாம்.

ஃ ஃ ஃ

பல்ஜிய மந்திரி சபை இசைகச்சேரி பவுன்கள் கூட்டுப் போலை ஒழிப்பதற்கென்று ஒரு மசோ வைத்துள்ளது.

ஃ ஃ ஃ

பிரான்ஸில் பிரஜா உற்பத்தி தடைமுறைகளை வைப்பவர்கள் வருவதால் சென்ற ஆண்டு பிறப்பைவிட இறப்பு மரணங்கள் அதிகமாக ஏற்பட்டிருக்கின்றன.

ஃ ஃ ஃ

இங்கிலாந்தில் வைத்தியக்காரர்களின் தொகை அதிகரித்து ஆகிக்கொண்டேவருகிறது. இப்போது ௩ லட்சம் பேரிருக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

அம்மை குத்திக் கொள்வதால் விசேஷ பயனொன்றுமில்லையென்று அறிஞர் கூறுகின்றார்கள். ஜர்மனி முதலிய நாகரீக நாடுகளில் இவ்வழக்கமில்லையாம்.

ஃ ஃ ஃ

பெண்களுக்கு தங்களுக்கு தங்களின்ப வாழ்வு எதுவென்பதை அறிந்து கொள்ளும்சக்தி அவர்களது ௩௦ வது வயதில்தான் ஏற்படுகிறது.

ஃ ஃ ஃ

கம்பியில்லாத் தந்தியும் மின்சார கிராமபோன்களும் அமைந்த ஜெர்மனியில் ரயில் வண்டிகள் நிர்மாணிக்கப்போகின்றார்களாம்.

ஃ ஃ ஃ

அலகாபாத் வேணிமாதவர் கோவிலில் உள்ள விக்கிரகங்களுக்குக் கதர் உடுத்த வேண்டுமென்று தர்ம கர்த்தாக்கள் தீர்மானம் செய்துள்ளார்கள்.

ஃ ஃ ஃ

மழைக்குக் குடையும், வழியில் காணும் அதிசயங்களைப் படம்பிடிக்கக் காமிராவும் ஒன்று சேர்ந்த கருவியொன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. படம் பிடிக்கவேண்டிய சமயத்தில் குடை கைப்பிடியாக உதவும்.

ஃ ஃ ஃ

செவிடர்களும் ரேடியோவின் மூலம் சங்கீதங்களைக் கேட்கத் தற்போது புதிய உபகரணம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதைக்காதில் வைத்துக்கேட்பதற்குப் பதிலாகப் பொறியில் வைத்துக்கொண்டால் நன்கு கேட்குமாம்.

ஃ ஃ ஃ

எகிப்திலுள்ள "பிரமிட்" என்ற பழய கட்டிடங்களுக்குள் சில வருடங்கட்கு முன் சில அடையாளங்கள் இருப்பதாகக் கண்டு பிடித்தார்கள். அவைகள் உலகின் எதிர்கால நிகழ்ச்சிகளை மறைமுகமாகக் காட்டுகின்றனவென்று தற்கால ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.

ஃ ஃ ஃ

வட அமெரிக்காவிலுள்ள "சாயாக்ரா" அருவியிலிருந்து தயாரிக்கப்படும் மின்சாரத்தை ஒரு தெரம்பிவழியாக ௫000 மைலுக்கப்பால் கொண்டு சென்று பெரும் பெரும் இயந்திரசாலைகளை இயக்குகின்றார்கள். பல நகரங்களுக்கு விளக்கேற்றவும் இது உபயோகப்படுகின்றது.

ஃ ஃ ஃ

இத்தாலியாவின்வடக்கிலுள்ள சமவெளியில் விளைவிக்கப்படும் செடி கொடிகள் சில காலங்களில், மேகத்திலிருந்துவிழும் பனிக்கட்டிகளால் நாசமுறுகின்றது. அவ்வூர் நாட்டு மக்கள் மேகங்களைக்கண்டதும் பெரியபெரிய துப்பாக்கிகளால் அவற்றைசுட்டு கலைத்து விடுகின்றார்களாம்.

---

## தர்சனுக் கடைசி முற்றுகை.

### ஆசிரமத்திற்கபாயம்.
### வரிமறுப்பாரம்பிக்க வேண்டும்.

ஜூன் ௩ தேதியும் தர்சனு உப்பள முற்றுகை நடைபெறவில்லை. சத்தியாக்கிரகிகள் மழைக்காலம் ஆரம்பித்துவிட்டதால் உப்பளத்தை கடைசி முறையாக முற்றுகை இட வேண்டுமென்று தீர்மானித்தார்கள்.

ஜூன் ௪ தேதி ௨ தொண்டர்கள் உப்பளத்தை அடைந்து சத்தியாக்கிரகம் செய்தார்கள். அவ்விருவரையும் போலீசார், முன் ஸ்ரீமதி சரோஜனியை எந்த இடத்தில் தடை செய்தார்களோ அதே இடத்தில் மறித்து நிறுத்திவிட்டனர். அவர்கட்கு உண்ண உணவும் குடிக்கத் தண்ணீரும் கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஸ்ரீமதி மணிபென்படேல் அவர்களைப் பார்ப்பதற்காக அங்கு சென்றார். இரவுமுழுதும் தொண்டர்கள் அங்கேயே இருந்துவிட்டார்கள். காலையில் போலீசார் அவர்களை மோட்டாரிலேற்றி அன்டாடி கிராமத்திற்குக் கொண்டு போயினர். அங்கு அவர்கட்கு பாலும் பழமும் கிடைத்தன. அப்பால் தொண்டர்கள் உண்டு பசிதீர்ந்து மீண்டும் தர்சனுவுக்குப் போனார்கள்.

### ஆசிரமத்திற்கபாயம்.

புல்சாரிலுள்ள சத்தியாக்கிரக நிலயத்தை அழிக்கும் விழைவோடு அங்குள்ள சில மாம்லத்தார்கள் சத்தியாக்கிரக நிலயம் கட்டும்படி தன நிலத்தைக் கொடுத்திருந்த ஒரு கணவானுக்கு நிலவரிச்சட்டப்படி பயிர் செய்யப்பெறாமல் ஒரு நிலத்தை வைத்திருந்தால் அதனை அரசாங்கத்திற்கு எடுத்துக்கொள்ள உரிமையுண்டு என்றும் அம்முறைப்படி ஏன் அந்த நிலத்தை எடுத்துக்கொள்ளக்கூடாதென்பதற்கு காரணம் காட்டவேண்டுமென்றும் நோட்டீஸ் கொடுத்துள்ளார்கள்.

தர்சனுத் தொண்டர் படைத்தலைவர் திரு. சகன்லால் ஜோஷி மழைக்காலம் வருகிறபடியால் தர்சனு சாத்விக உப்பள முற்றுகைப் போர் நிறுத்திவைக்கப்படுமென்றும், புதிய அவசரசட்டங்களை மீறி வரிமறுப்பை ஆரம்பிக்க முயற்சி செய்யப்படுமென்றும் அறிக்கைவிட்டிருக்கின்றார்.

ஸ்ரீமதி காந்திஜியின் அறிக்கை ஒன்றும் தர்சனுயிலுள்ள அரசாங்கக் கொடுமையை பழிக்குப் பழிவாங்க வேண்டுமானால் இப்பொழுதுள்ள அரசாங்கத்தை அழிக்கவேண்டுமென்றும், அவர் பூரண மதுவிலக்கு பிரசாரத்தையும் மறியல் வேலையையும் உறுதியாக நடத்துவாரென்றும் தெரிவிக்கின்றது.

தர்சனு சத்தியாக்கிரகத்தில் இதுவரை ௨௫௦௦ பேர்கள் போலீசாரால் அடிக்கப்பட்டிருக்கின்றனரா எனறும், ௧௨௦௦ பேர்கள் பலமானகாயமுண்டிருக்கின்றார்களென்றும் ஒருவர் மாணமடைந்தாரென்றும் தெரிகிறது.

—

## பெசண்டம்மையார் பேச்சு.

பார்லிமெண்டில் டாக்டர் பெசண்டு இந்திய நிலைமையைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்தார். காமன்ஸ் சபை மெம்பர்களும் மற்றவர்களும் கூட்டத்துக்கு ஏராளமாக வந்திருந்தனர். அவர் பேசியதாவது:—பிரிட்டிஷ் அரசாட்சியினால் இந்தியாவின் புராதன ஸ்தாபனங்களெல்லாம் அழிந்துவிட்டன. ஜனங்கள் வறுமையடைந்துவிட்டார்கள். கல்விப் பயிற்சியும் கெட்டுப் போயிற்று. வைவே நாட்டில் அதிருப்தி நிலவியிருக்கிறது பிரிட்டிஷ் இந்தியாவைவிட அநேக சுதேச சமஸ்தானங்கள் கல்வி விஷயத்தில் முன்னணியில் நிற்கின்றன. பாட்டியாலா மகாராஜா மீது ஆரோபணம் செய்யப்பட்டிருக்கும் குற்றங்கள் உண்மையென்று நிரூபிக்கப்பட்டால் அவரை நாட்டை விட்டு ஓட்ட வேண்டியது தான்.

எக்கத்தினாலேயோ லாகூர் காங்கிரஸ் பூரணசுயேச்சைத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றது. அந்தத் தீர்மானம் நிறைவேற்றுவதினால் பூரண சுயேச்சை வந்துவிடாது. பூரண சுயேச்சை பெற நாடு தகுதி பெறும் போதுதான் பூரண சுயேச்சை வரும். தற்காலத்தில் குடியேற்ற நாட்டுப் பொறுப்பாட்சி இந்தியர்களுக்குத் திருப்தியளிக்கும். ஒரு எச்சரிக்கையாகவே காங்கிரஸ் பூரண சுயேச்சைத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. பிரிட்டிஷார் அலக்ஷியம் செய்யாமல் நிலைமையைக் கவனிக்கவேண்டும். மகாயுத்தத்தினால் இங்கிலாந்துக்குக் கஷ்டமுண்டானபோது அதைத் தனக்கு அனுகூலமாக உபயோகப்படுத்திக்கொள்ள இந்தியா விரும்பவில்லை. பிரிட்டிஷார் தான் ஒழுங்கீனமாக நடந்திருக்கிறார்கள். யுத்தகாலத்தில் இந்தியர்களுக்கு அளித்த வாக்குறுதிகளையெல்லாம் யுத்தம் முடிந்தவுடன் பிரிட்டிஷார் மறந்துவிட்டார்கள். இனிமேல்பிரிட்டனுக்குக்கஷ்டமுண்டானால் இந்தியா உதவிபுரியுமென்று நம்புவதற்கில்லை. இந்தியர்கள்மனதில் அவ்வளவுக்கு அதிருப்தியும் வெறுப்பும் பகையும் குடிகொண்டிருக்கிறது. உலகத்தின் பிற்கால க்ஷேமத்துக்கு இந்தியாவும் இங்கிலாந்தும் ஐக்கியமாக இருக்கவேண்டியது அவசியமாயிருப்பதினால், இந்தியர் அதிருப்தியை எண்ணி நான் வருந்துகிறேன். இந்தியர்களுக்கு சுயநிர்ணய உரிமையளிக்க பிரிட்டிஷார் கட்டுப்பாடாக மறுத்து வருவதினால், இந்தியாவிலே பிரிட்டிஷாருக்குச செல்வாக்கில்லாமலாய் விட்டது. இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாட்சிக்கு இப்பொழுது ஆபத்து நேர்ந்திருக்கிறது. எனவே மேலும் அலக்ஷ்யமாக இராமல் இந்தியாவின் நியாயமான உரிமைகளை வழங்கப் பார்லிமெண்டு மெம்பர்கள் முயற்சி செய்யவேண்டும்.

—

## வோர்லிச் சிறைச்சாலைக்குழப்பம்

### சிறையைச் சுற்றியவேலி.
### பெண்களின் ஊக்கம்.

வாடாலாவில் சிறைப்பட்ட தொண்டர்களைக் கைது செய்து அடைத்து வைப்பதற்காக அமைத்துள்ள வோர்லி சிறைச்சாலைத் தொண்டர்கள் ஜூன் ௩-ந்தேதி அரச பெருமான்பிறந்தநாள்கொண்டாட்டத்திற்கு எதிர்ப்பிரசாரமாக காவற்கூடங்களுக்கு மேல் கருப்புக்கொடியைக் கட்ட முயன்றனர். அன்றிக் கருப்புத் துணியை கையிலும் கட்டிக்கொண்டு அரசாங்கத்திற்கெதிரான வாக்கியங்களைக் கூறி ஆரவாரித்தார்கள். அதே சமயத்தில் முன்னமே ஏற்பாடு செய்திருந்தவண்ணம் சிறையைச் சுற்றிலும் இன்று ராணுவ சிப்பாய்கள் முள் கம்பிகளால்வேலிவளைந்து கொண்டிருந்தனர். அப்பொழுது சில பெண்கள் அங்குவந்து அவ்விதம் வேலி அமைப்பதை எதிர்த்து சத்தியாக்கிரகம் செய்தனர் அப்பெண்களை ராணுவ சிப்பாய்களும் போலீசாரும் பலவந்தமாக அப்புறப்படுத்தினார்களென்று சொல்லப்படுகிறது இச்சம்பவத்தைக் கண்ட விசாரணைக் கைதிகளான தொண்டர்கள் கோபமூண்டவர்களாகி தங்களைச் சுற்றி வளைத்துள்ள வேலியின் ஒரு பகுதியைத் தகர்த்தெறிந்து கொண்டு வந்தார்கள். இதனால் ராணுவ சிப்பாய்கள் வேலி யமைப்பதற்கு இடைஞ்சல் நேரிட்டது. எனவே பல போலீசார் அவ்விடத்திற்கு வந்து கைதியான தொண்டர்களை சிறைச்சாலைக்குள் தள்ளினர். அப்பால மாலை சுமார் ௫ மணிக்கு ராணுவ சிப்பாய்கள் ரிவால்வர்கள் வைத்துக்கொண்டு மீண்டும் கம்பிவேலி வளைய ஆரம்பித்தனர் அவர்கள் வேலையை போலீஸ் கமிஷனர் மேற்பார்வை செய்துவந்தார். அவர்கள் வேலை ஆரம்பித்த 10 நிமிஷங்களுக்குப் பின் சிறைச்சாலை உள்ளுக்கிருந்து ஒரு சிப்பாய் அணிந்திருந்த தொப்பியின் மீது கல் வந்து விழுந்ததாக சொல்லப்படுகிறது. அப்பொழுது தொண்டர் கூட்டமாகத் திரண்டுவர சிறைச்சாலையில் குழப்பமேற்பட்டது. உடனே போலீசார் அவர்களைத் தடி கொண்டு தாக்கினார்கள். அதனால் விசாரணைக் கைதிகளான ௧௨ தொண்டர்களுக்குப் பலத்த காயமேற்பட்டு மூர்ச்சையானார்கள். இச்செய்தியெட்டியதும் ௧௬-வது ஹைதராபாத் ராணுவமும் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தது இப்பொழுது நிலைமை அமைதியுற்றிருக்கிறது.

வோர்லி சிறைச்சாலை குழப்பத்தில காயமுபட்ட ௨௩ தொண்டர்களை காங்கிரஸ் ஆஸ்பத்திரிக்கு அனுப்பியிருக்கின்றனர். அவர்களில் ௫ பேர்களுக்கு மண்டையில் பலமான அடிபட்டிருப்பதால் அவர்கள் அபாயகரமான நிலைமையிலிருக்கின்றனர்.

ஜூன் ௪-ந்தேதி முதல்25 ராணுவப் போலீசாரும் ௩௦ பாணுக்கடி போலீசும் ௬ ஐரோப்பிய அதிகாரிகளும் பாதுகாவல் செய்து வருகின்றனர். ஹைதராபாத் துருப்பு திரும்பிப்போய் விட்டது. சற்று அமைதி ஏற்பட்டிருக்கின்றது.

—

## திரு. பருச்சா அறிக்கை.

புல்சாரிலும், அண்டாடியிலுமுள்ள சத்தியாக்கிரக ஆஸ்பத்திரிகளைப் பார்வையிட்டுவந்த திரு பி. எப். பருச்சா பத்திரிகைகளுக்கு கீழ்க்கண்ட அறிக்கை வெளியிட்டிருக்கின்றார்:—

தர்சனு தொண்டர்கள் பட்ட அடிகளையும் அவர்களுக்கு நேரிட்ட காயங்களையும் கண்டு நான் திடுக்கிட்டுப் போனேன். மர்மஸ்தானங்களில்கூட தொண்டர்களுக்கு காயம் ஏற்பட்டிருக்கிறது. டாக்டர் பாஸ்காராவ் படேலும், டாக்டர் ஹெச். எம். ஜோஷியும் சிகிச்சை செய்து வருகிறார்கள். திரு லாலுபாய் ஜாவேரியும் தொண்டர்களுக்கு சிகிச்சையளித்து வருகிறார் நான் திரு மணிலாலேயும், திரு சகன்லால் ஜோஷியையும் அண்டாடியில் பார்த்தேன். அவர்கள் மிக உற்சாகத்துடனிருக்கின்றனர். ஆஸ்பத்திரி நிர்வாகத்திற்கும் சத்தியாக்கிரகிகளைச் சார்ந்தவர்கள் உதவிக்கும் ௩௦௦ ரூபாய் இப்பொழுது அவசரமாக வேண்டும். பம்பாய் வாசிகள் தயவுசெய்து புல்சாரிலுள்ள ஸ்ரீமதி மணிபென் வல்லபாய் படேலுக்கு அத் தொகையை அனுப்பிவைக்கக் கோருகிறேன்.

—

கொலைக் குற்றம் சாட்டப்பட்டிருந்த ஓரினுனுக்கும் அவனது உடந்தைக் குற்றவாளியான ஒருத்திக்கும் ஸ்டார்ன்போர்க் சிறையிலேயே திருமணம் நிகழ்ந்ததாம்.

ஃ ஃ ஃ

இங்கிலாந்தில் அலெக்ஸாண்டர் என்ற உலக அவலட்சணப்போட்டியில் முதன்மைபெற்ற மனிதன், உலக அழகுப் போட்டியில் பரிசுபெற்ற பேரழகி ஒருத்தியை மணந்து கொண்டானாம்.

ஃ ஃ ஃ

தென்மேரிக்காவிலுள்ள ஆமேஸான் நதிக்கு சமீபமுள்ள குரங்குகள் ஆற்றைக் கடக்க வேண்டிய சமயத்தில் ஒரு மரக்கிளையிலிருந்து ஒன்றன்கொன்று வாலைப்பிடித்து ஓர் சங்கிலி போல் தொங்குகின்றனவாம். அப்பால் காற்றோட்டத்துக்குத் தகுந்தபடி அங்குமிங்குமசைந்து ஆற்றுக்கு மறுபுறமுள்ள மரத்தைக் கைப்பற்றிப் பாலம்போல் தொங்குகின்றன. பின்னர் முதற் குரங்கு கையைவிட இரண்டாவது பற்றியமரத்திலிருந்து சங்கிலிபோல் தம்மி தப்பிக்கொள்கின்றன.

—







## எல்லைப்புறத்துத் தொல்லை.

### 3000 அபிரிடிகள் படையெடுத்தனர்.

கொஞ்சகாலமாக வடமேற்கு மாகாணங்களில் எல்லைப்புற ஜாதியாருக்குள் பெரும் கிளர்ச்சி ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. தம்பஹாரைச் சேர்ந்த ஆயுதபாணிகளான உத்மான் கேல்கள் என்பவர் பெஷவார் ஜில்லாவை கிட்டியிருப்பதாக செய்திகள் கிளம்புகின்றன. எல்லைப்புற ஜாதியாரான பிராங்கார் முதலிய கிராமவாசிகளும் அவர்களோடு சேர்ந்திருக்கின்றார்கள்.

மே ௨௯ தேதி பிராங்கார் என்ற கிராமவாசிகளுக்கு ஓர் இறுதிக் கடிதம் அனுப்பப்பட்டது. அதில் அவர்கள் ௨௪-மணி நேரத்தில் கிராமத்தைக் காலிசெய்துவிட வேண்டுமென்றும் தங்களுடைய பகைமையை நீக்கிவிடவேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்த இறுதிக்கடிதத்தினால் பலனொன்றும் கிடைக்கவில்லை. ஆகவே பிராங்கார் மீது ஜூன் ௩ தேதி ஆகாயப்படையைக் கொண்டுசென்று நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. இன்னும் தாங்ஜாய் ஹாஜியும் அவரது புதல்வரும் ஹலீம்சாய் பார்ஹான் கேல் மோமண்டு பிரதேசத்தில் தானிருந்து வருகிறார்கள். இது அப்பகுதியினரின் விருப்பத்திற்கு மாறானதினால் மிகுந்த தொல்லை விளையக்கூடுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. இவர்களுடன் மேலும் சிற சிற கோஷ்டியினர் வந்து சேர்ந்து கொண்டிருக்கின்றார்கள். இவர்கள் வலி பெருக்குவதைத் தடைசெய்வதற்காக ஆகாயப்படைகள் சென்று நடவடிக்கை எடுத்துக்கொள்கின்றன. ஜூன் ௩ தேதி இக்கலகக்காரர்கள் ஷாப்காதார் கிராமத்திற்கருகில் ஒளிந்திருந்துகொண்டு எல்லைப்புறப் போலீசார் வந்துகொண்டிருந்த ௨ மோட்டார் பஸ்களைப் பார்த்துத் துப்பாக்கியினால் சுட்டார்கள். அதில் ஒரு மோட்டாரோட்டி உயிர்துறந்தார். எனவே அவர்கள் உடைக்கப்பட்டு எரிக்கப்பட்டது. ௨-வது டிரைவர் பலத்தகாயமேற்றார். ஜூன் ௪ தேதி இக்கிராமத்திலுள்ள கிரியானி என்னும் ஜாதியார் மேற்படிக் கலகக்காரர்களோடு சேர்ந்திருக்கின்றார்களென்ற சந்தேகத்தின் மேல் சில வீடுகள் பரிசோதிக்கப்பட்டு சிலர் கைது செய்யப்பட்டார்கள். ௨௯ தேதியன்று சுமார் ௩௦ அபிரிடிகள் ஹாசரிமைதானத்தின் மேற்கு எல்லையிலிருக்கும் தாடா சினாவில் சையத் ஆல்மார், சையத் கபீர், சையத் பாட்சா, மற்றைய முல்லாக்கள் தலைமையில் கூடினர். ௨௩-ந்தேதி இரவு பெஷாவார் ஜில்லா எல்லையிலிருக்கும் மாரிகாவார் போஸ்ட் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். மே ௨௪-ந்தேதி சிகப்புக் கொடியுடன் சுமார் ௩௦௦௦ அபிரிடிகள் மைதானத்தில் கூடினர். மே ௩௦-தேதி அவர்களுடன் மலிக்டெண்டேல், கும்பார்கில், ஜக்கில் முதலிய இடங்களிலுள்ளவர்களும் வந்து சேர்ந்து கொண்டனர். எல்லோரும் எட்டுக் கொடிகளுடன் அன்றே பார்க்கிலிருந்து புறப்பட்டனர். இம்மாதம் முதல் தேதி பெஷாவார் ஜில்லாவின் எல்லையிலிருந்து பதினேந்து மைல் தூரத்திலிருக்கும் பாரா பள்ளத்தாக்கிற்கு வந்து சேர்ந்தனராம்.

### கூடத்தில பிளவு.

அங்கு ஒரு கூட்டம்கூடி பெஷாவார் ஜில்லாவிற்குள் நுழைவதா வேண்டாமா என்று பலமாக வாதித்தனராம். கூட்டம் இரண்டாக பிரிந்ததாம். மிதவாதிகளும் சேர்மையானர்களும் தாங்கள் இருந்த இருப்பிடத்திலே தங்கி விட்டனராம். விரோதபபான்மையும் மூர்க்கத்தனமும் கொண்டவர்கள் பெஷாவார் ஜில்லாவை நோக்கி வந்தார்கள். இவர்களுடன் சுமார் ௫௦௦ சரக்காகில் வாசிகளும் வந்து சேர்ந்து கொண்டனர். பெஷாவாரை நோக்கி இவர்கள் வந்துகொண்டிருக்கின்றனராம்.

அடேஜா கிராமத்தில் கொள்ளைக்காரர்கள் ஒரு செட்டியக்கடைக்காரர வீட்டிற்குள் புகுந்து ஒரு ஸ்திரீயையும் ௬ புருஷர்களையும் கொன்றனர்.

கோஹட் முதலியஜில்லாக்கள் இப்போது அமைதியாயிருக்கின்றன.

—

## திருநெல்வேலி ஜில்லா ௩-வது சுயமரியாதை மகாநாடு.

(நமது நிருபர்)

நெல்லை ௩௦௨.

திருநெல்வேலி ஜில்லா ௩-வது சுயமரியாதை மகாநாடு ஜூன் ௭-ந்தேதி சனிக்கிழமை மாலை ௬-மணிக்கு வடமுக விலாஸ் நாடகசாலையில் ராவ்சாகிப் கற்பக விநாயகம் பிள்ளை அவர்கள் தலைமையில் ஆரம்பமானது. ஏராளமான பிரதிநிதிகள் மகாநாட்டிற்கு விஜயம் செய்திருந்தனர். சாத்தன்குளம் திரு. அ ராகவன் அவர்கள் கடவுளைக்கண்டிக்கும் (மூடர்கள்) என்னும் விஷயம்பற்றிப்பேசினர். பிறகு திரு. வி. ஆ பெ. விஸ்வநாதம் அவர்களால் ஜாதி வேற்றுமை என்பது பற்றி ஓர் சொற்பொழிவாற்றப்பட்டது.

### தலைவர்கள் வருகை.

திரு. ஈ. வெ. ராமசாமியார் திரு ஸி. நடராஜன், காரை திரு. காளியப்பன், ஸ்ரீமதிகள் ரங்கம்மாள், நாகம்மையார் ஆகியவர்கள் சனிக்கிழமை மாலை ௫-௩௦-மணிக்கு வந்து சேர்ந்தனர். திருவாளர்கள் ராகவன், ராமநாதர், குற்றாலலிங்கம் மற்றும் பலரும் ரயில்வே ஸ்டேஷனில் தலைவர்களை வரவேற்றார்கள். சிற்றுண்டிக்குப் பிறகு திரு. ஈ. வே ராமசாமியாரும் மற்றும் பலரும் மகாநாட்டிற்குச் சென்றார்கள்.

மகாநாட்டுத் தலைவர் ராவ் சாகிப் கற்பக விநாயகம் பிள்ளையவர்கள் தென்காசிக்கு அவசரமாகப் போகவிருந்ததால் தலைவர் பதவியை திரு ஈ. வே. ராமசாமியார் ஏற்றுக்கொண்டார். திரு. ஈ. வே ராமசாமியார் தலைமையில் திரு விசுவநாதம் அவர்கள் பேசினர். ஜூன் அ-௨ காலையில் திரு எஸ். ராமநாதன் அவர்களும், மாலையில் இளைஞர் மகாநாட்டுத் தலைவர் திரு ஜே. எஸ். கண்ணப்பர் அவர்களும், ராம சுப்பிரமணியம், ஸ்ரீமதி மரகத வல்லி ஆகியவர்களும் இங்கு வந்து சேர்ந்தனர். திரு ஜே. எஸ். கண்ணப்பர் அவர்களை ரயில்வேஷ்டேஷனில் வரவேற்றனர். நேற்று மகாநாடு மாலை ௫-௩௦ மணிக்கு திரு எஸ். ராமநாதன் அவர்கள் தலைமையில் மீண்டும் கூடியது.

எட்டுத் தீர்மானங்கள் நிறைவேறின. அவைகளில் ஒன்று ஈரோடு மகாநாட்டுத் தீர்மானங்களை ஒப்புக்கொள்வதாகும், தீர்மானங்கள் நிறைவேறியபின் சுசீந்திரம் சத்தியாக்கிரகத்தைக் கைக்கொண்டு நடத்தும்படி சுயமரியாதை சத்தியாக்கிரகக் கமிட்டியைக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானம் நிறைவேறியது. காரைக்குடி திரு. சின்னையா அவர்கள் 'கோயில் சத்தியாக்கிரகத்தை'ப்பற்றியும், திரு. முருகப்பா அவர்கள் 'சமது இயக்கம்' என்பதுபற்றியும் பேசினார்கள். அதனையொட்டி திரு. ராமசாமிப் பெரியாரும் பேசினர். ௯௨ முற்பகலில் திரு. கண்ணப்பர் அவர்கள் தலைமையில் இளைஞர் மகாநாடுகூடிற்று. அதில் ஈரோட்டு இளைஞர்மகாநாட்டுத் தீர்மானங்கள் யாவும் நிறைவேற்றப்பட்டன. அத்தீர்மானத்தைஆதரித்து, திரு. ராமநாதன், திரு. செல்வக்கணபதியார், திரு. காளியப்பன், திரு. மரகதவல்லியார், திரு. ஜி. ரெங்கம்மாள் முதலியோர் பேசினர். தலைவரின் அரிய உபந்யாசத்துடன் முடிவுபெற்றது. பிற்பகலில் திரு. ராமசாமிப் பெரியார் தலைமையில் திருவாளர்களான சுப்பிரமணியதாஸ், குப்தா, முருகப்பா, ரெங்கம்மாள் முதலியோர் உபந்யாசம் புரிந்தனர். திரு. மரகதவல்லியார் சுயமரியாதைப் பாட்டுப்பாடினர், தலைவருடைய நீண்ட உபந்யாசத்துடன் கூட்டம் நிறைவேறியது. ௩௦௨ முற்பகலில் திரு. ஈ. வி. ராமசாமி அவர்கள் தலைமையில் மதுவிலக்கு மகாநாடு சிறப்பாக நடைபெற்றது.

—



## சுசீந்திரம் விடுதலைப்போர்.

### தொண்டர்கட்குத் தண்டனை.

### தருமராஜ்யத்தின் தன்மை இது!

(ஒரு நிருபர்)

தாழ்த்தப்பட்ட வகுப்பார் தெருவில் நடமாடும் உரிமைக்காகப் போராடத் தொடங்கியான் தொட்டு சுசீந்திரம் கொடுமைக்கும் வஞ்சத்திற்கும் உறைவிடமாகிவிட்டது. யாதொரு நீதியுமின்றி தெருத் தெருவாயும் போக்கிரிகள் தங்கள் பக்கத்தில் அரசாங்கமிருக்கின்றதென்ற நம்பிக்கையால் அமலிசெய்யத் தொடங்கி விட்டார்கள். பகுத்தறிவு சிறிது மற்று ஏழையரை அன்புறுத்தவும் சத்தியாக்கிரக அனுதாபிகளை அல்லல் படுத்தவும் செய்வதே அவர்களது இன்றைய வேலையாகும். இதனைப் போலீசாரும் ஏனைய அரசாங்க அதிகாரிகளும் அறிந்திருந்தும் கவனஞ் செலுத்தாது போயிருக்கின்றார்கள். இத்தகைய மௌனம் மறைமுகமாக சுசீந்திரத்தில் சில போக்கிரிகளை வளர்க்கவும் இயல்பாக அமைந்திருக்கும் காலிகளை ஊக்கமே ஏதுவாகுமென்று அவர்கள் உணரவேண்டும். அரசாங்கத்தின் பாக்கபுத்தியில் ஏழைமக்களுக்கு உரிமையை வழங்காது ஆளுவது நேர்மை என்று தோற்றின் அவர்கள் மேற்கூறியவாறு சில கயவர்களைப் போற்றுவதை எவ்வழியாலும் ஏற்றுக்கொள்ளமுடியாது. ஆராய்ந்து பார்க்குமிடத்து இன்றைய நிலையில் திருவாங்கூர் அரசாங்கம் (சத்தியாக்கிரகிகள் எதிரிகள் என்ற) இருகாப்பினருக்கும் இன்னலையே கொடுக்கின்றது என்னலாம்.

இது சம்பந்தமாக அடிக்கடி நாகர்கோவில் முதலிய இடங்களில்பகைக்கூட்டங்கள் நடைபெறுகின்றன. அவற்றில் சுயமரியாதை வாதிகளும் காங்கிரசாரும் கலந்திருப்பது போற்றத்தகுந்ததாகும். இவர்களுடைய முயற்சியால் சத்தியாக்கிரக சம்பந்தமா யெழுந்த கேசுகள் (வழக்கு) மிக கவலையோடு நடத்தப்படுகின்றன. அண்மையில் திருவனந்தபுரத்தில் பேர்போன வக்கீலான மன்னூர் கோவிந்தப் பிள்ளையவர்கள் இவ்வழக்கில் தலையிடப் போகிறார்கள் என்று தோற்றுகிறது.

கடந்த ௭ தேதி சனிக்கிழமையன்று பத்மநாபபுரம் மாஜிஸ்திரேட் இதுவரையிலும் சிறைப்பட்ட தொண்டர்களில் சிலரை விசாரணைசெய்து ௧௬-பேருக்கு ஒருவருஷ காவல் தண்டனை விதித்தார். இவ்விதத்தீர்ப்புஎதிராப்பு வக்கீலும் சாட்சிகளும் ஆஜரில்லாத போது அல்லாவது கோர்ட்டு ஆரம்பமாக வேண்டிய நேரத்திற்கு ஒரு மணிக்கு முன்னாக சொல்லப்பட்டதாம். இதனை வழக்கறிஞர்கள் பலமாகக்கண்டிக்கின்றார்கள். இது எந்தச் சட்டத்திலும் காண முடியாத ஒரு புதுமையென்று ஒரு வக்கீல்கூறினார். எனவே ஒழுங்குள்ள ஒரு நீதிபதியிடம் இக்கேசுக்கு அப்பீல் நடவடிக்கையெடுத்துக் கொள்வதென்றால் இவ்விதியை நீக்கிவிடுவார் என்பது திண்ணம். அப்படியிருக்க பத்மநாபபுரம் மாஜிஸ்திரேட் இவ்விதத் தீர்ப்பளித்ததை என்னென்று கூறுவது. அவரது தயாளகுணமோ அன்றி தருமராஜ்யத்தின் தன்மையோ தெரியவில்லை. எனினும் இத்தவறுக்கை ஹைகோர்ட்டு வரைக்கும் கொண்டு சென்று திருவாங்கூரின் தன்மையை வெளியுறுத்த வேண்டுமென்று சத்தியாக்கிரகத்தினர் வர்கள் எண்ணியுள்ளார்கள்.

—

நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
பிரமோதூத-ஸு வைகாசி-மீ ௩௦-உ

## சைவக் கோட்டை.

நமது நாட்டில் சிற்சில இடங்கள் பார்ப்பனக்கோட்டை யென்று கூறப்படுகின்றன. அவ்விடங்கள் உண்மையிலேயே இன்று பார்ப்பனக் கோட்டைகளாகவே இருப்பதைக் காணலாம். இந்திய நாடு முற்றும் பார்ப்பனக் கோட்டையாகவே பன்னூறாண்டுகளிருந்து வந்ததென்பதை நாம் கூறவேண்டியதில்லை. அப்படிப்பட்ட இந்தியப் பெருங்கோட்டை மதில்கள் தகர்ந்து போயின. உட்பாகத்திலுள்ள பற்பல சிறுகோட்டைகளே இன்று காணக்கிடக்கின்றன வென்னலாம். இக் கோட்டைகளிற் சில பெரியன, பல சிறியன. இக்கோட்டைகளும் பார்ப்பனரல்லாதாரியக்கத்தின் அதிர்ச்சியிலே தகர்ந்து விழுந்து வருவதைக் காண்கிறோம். அஸ்திவார பலமில்லாமல் கெட்டிச் சுவரால் உரம் பெற்று நின்ற இக் கோட்டை இடிந்து விழுந்து தூளாகாமல் முடியாதென்பது உறுதி. இப் பார்ப்பனக் கோட்டையினுள் மற்றையோர் புகக் கூடாதென்னும் சட்டம் தளருகிறதாய் தளர்ந்து வருவதைக் காண்கிறோம்.

இப் பார்ப்பனப்பெருங்கோட்டையினுட்பட்டுச் சில சைவக் கோட்டைகளுங் காணப்படுகின்றன வென்று கூறவேண்டியதில்லை. அம்மாதிரியான கோட்டைகளுட் பெரிது திருநெல்வேலியென்று கூறப்படுகிறது. இப் பெருங் கோட்டையுட் சுயமரியாதைப் போராட்டம் புகுந்துவிட்ட செய்தி சீர்திருத்த நெறியாளர்க்கு மகிழ்ச்சி தருஞ் செய்தியாகும். பிரமா வகுத்த நான்கு ஜாதிக்கும் அப்பாற்பட்டுப் பரமேசுவரனாலேயே வகுத்து விடப்பட்ட சைவத் திருவாளர் மலிந்த திருநெல்வேலித் திருகூடத்தில் சுயமரியாதை முழக்கம் ஒலியும் எதிரொலியுமாகப் பரவி நிற்கின்றது. ஆஸ்திக மெது, நாஸ்திக மெது, அறிவெது, அறியாமையெது என்ற விஷயங்கள் மக்கள் மனத்தில் எழுந்து விட்டன. மக்கள் பகுத்தறிவுக்கு இவ் விஷயங்கள் கொண்டுவரப்பட்டுவிட்டன. இனி "சொல்வதைக் கேள்! எழுதியிருப்பவற்றை நம்பு' எதிர்த்துப் பேசாதே! இவ்வாக்கியங்களை ஒப்புக்கொள்ளாவிட்டால் நரகத்துக்குப் போவாய்" என்ற உபதேசங்கள் தானே மறையவேண்டிய நிலை யேற்பட்டுவிட்டது. குருட்டு நம்பிக்கை யென்னும் கோட்டைச் சுவர் தகர்க்கப்படவேண்டுமென்ற உணர்வை திருநெல்வேலிப் பொது மக்களும் ஆண்டு வளமை பெற்றுள்ள சைவமக்களும் உணரவேண்டிய நிலை யேற்பட்டுவிட்டதென்பதி லையமில்லை. எல்லா ஜாதியாரிலும் சிறந்தவர் 'பார்ப்பனர்தான்' என்ற நம்பிக்கையை மக்கட்கு உண்டாக்கி அந் நம்பிக்கை மாறிப்போக முடியாதபடி கோவில்களையும் வேத சாத்திர புராணேதிகாசங்களையும் தோற்றுவித்து நித்திய வாழ்வில் கலந்து உரம் பெறச் செய்து வைத்திருக்கும் பார்ப்பனச் சூழ்ச்சியை ஒருவாறு பலனுட்கட்கு முன்னர் நமது சைவநன்மக்களே உணர்ந்தனர். உணர்ந்த அளவோடு அவர்கள் நில்லாமல் செயற்கை வழியிலும் முயன்று வெற்றியும் பெற்றார்களென்பது சீர்திருத்த நெறியாளர்க்கு மகிழ்ச்சி தருவதாகுமன்றோ? பார்ப்பனர் நமது சைவ நன்மக்களை நாலாம் வகுப்பில் சேர்த்ததைப் பொறுமல் பார்ப்பனர்க்குப் போட்டியாக எழுந்து பலவகைப்பட்ட உரிமைகளையும் பெற்றனர். இணங்கினவரை பார்ப்பனருடன் சேர்ந்து உரிமை பெற்றும் இணங்காதபோது தமக்கெனச் சில துறைகளை வகுத்து அவர்களைப் போன்ற உரிமைகளைப் பெற்றும் பார்ப்பனரல்லாதார் கூட்டத்தினர்க்கும் அறிவும் பிறவும் உண்டென்பதை நிலைநாட்டினர். இம்மாதிரியான செய்கையானது நமது இயக்கத்துக்கு ஒரு அஸ்திவாரபலம்போன்றிருக்கிறதென்று கூறுவது மிகையாகாது. ஆனால் இச் சைவத் திருவாளர்கள் பார்ப்பனருடன் ஒருவாறு சமத்துவம் பெறுவதற்குக் கையாண்ட முறையினால் நமக்கு தாங்கமுடியாத ஒரு தலைச் சுமையுள்ளவன் தலையில் இரண்டு சுமையேற்றியதைப்போல் துன்பம் அதிகரித்து விட்டதென்பதையும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். மற்றவரை அடிமைப்படுத்தி எப்படிப் பார்ப்பனர் மேலேறச் சூழ்ச்சி செய்தனரோ அதே வழியைச் சைவர்களும் பின்பற்றி "எல்லா மக்கட்கும் தாங்கள் உயர்ந்தவர்; தங்கட்குள்ப் பார்ப்பனர் உயர்ந்தவர்" என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு தாம் உயர முயன்றனரேயன்றி மக்கள் யாவரும் 'சரிநிகர்சமானம்' என்ற பெருங் கொள்கையை அவர்கள் கொண்டாரில்லை. இதன் பயனாகவே பார்ப்பனர், சைவர் என்ற இருபெருங் குழுவும் சுயமரியாதைப் போருக்கு எதிரே நிறுத்தப்பட்டிருக்கின்றனவென்பதை வணக்கமாகத் தெரிவிக்கிறோம். பார்ப்பனர் ஆதிக்கம் நாடு முற்றும் பாவியிருப்பதைப்போல் தமிழகத்தின் பெரும்பாகம் சைவர் ஆதிக்கத்தைக் கொண்டிருக்கின்றது. அதில் முக்கியமான சைவக் கோட்டைகளாக விளங்கும் சில ஊர்களுள் திருநெல்வேலி மிக முக்கியமானதாகும். ஈண்டு ஜூன் எ, அ, கூ, க0 தேதிகளில் சுயமரியாதை மகாநாடுகள் நடைபெற்றிருக்கிறது. இதன் பயனாக இச் சைவக் கோட்டையில் சுற்றுச் சுவர்கள் அசைக்கப்பட்டுவிட்டனவென்பதை மறுக்கமுடியாது. சைவத்தில் பெரும் பற்றுக் கொண்டிருப்பவர்களும், சைவப் பெருஞ் சமயத்திற்குத் தாங்களே அச்சாணியென்று கருதியிருப்பவர்களும் சைவர்களுள்ளும் பரிசுத்த சைவர் தாமே யென்றுங் கருதியிருக்கும் நமது நண்பர் சிலருடைய உள்ளத்தில் அச்சமும் ஐயமும் தோன்றிவிட்டனவென்பது குறி பிடத்தக்க செய்தியாகும். சைவ மெய்யன்பர்கள் தனிக் கூட்டங் கூடி ஆர்ப்பாட்டம் செய்யாமலிருக்க இனி முடியாது. கூடுங்கூட்டத்தில் வீணாகச் சுயமரியாதை இயக்கத்தைத் தூற்ற முயலாமல் அவ்வியக்கத்துக்கு அரண்செய்யும் வகையில் சைவ சித்தாந்தத்தைத் திருத்தியமைக்க முயல்வார்களாயின் ஏதாவது பிரயோஜன முண்டாகுமென்று அவர்கட்கு அறிவுறுத்த விரும்புகிறோம்.

—

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சன்னை உண்டியல் வட்டம் | 0—௨—0 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | 0—௧௨—0 |
| பவுன் விலை | ௧௩—௧௧—0 |
| வெள்ளிக் கட்டி | ௫௪—0—௰ |
| சென்னை வைகாசிமாத நடப்பு வட்டி | 0—௧௧—0 |

மலாய்நாட்டு உண்டியல்

விலை விற்பது நூற்றிஐம்பதேழு
மேற்படி வாங்குவது நூற்றிஐம்பத்தமூன்று
இங்கிலாந்து பாங்குவட்டி மூன்று பெர்ஸன்டு
இம்பீரியல் பாங்குவட்டி ஆறு பெர்ஸன்டு

ஒரு சிறுகூட்டம்:—கடந்த வியாழக்கிழமை மாலை ரு-௩0-க்கு இவ்வூரிலுள்ள சில காங்கிரஸ் இளைஞர்கள் தேசீய கீதங்களுடனும் தேசீயக் கொடிகளுடனும் கதர்ஸ்டோருக்குச் சமீபமிருந்து புறப்பட்டு மகர்நோன்புப் பொட்டலுக்குவந்து ஒரு கூட்டம் கூட்டினார்கள். கூட்டத்தில்சில தொண்டர்களால் தேசீய சாமான்களை உபயோகிக்கவேண்டிய அவசியத்தைப் பற்றியும் உப்புச் சத்தியாக்கிரகத்தைப் பற்றியும் பெருஞ் சொல்லாற்றப்பட்டது. இவர்கள் ஆதியில் கல்லுக்கட்டிக்குச்சமீபம் கூட்டம்கூட முயன்றார்களென்றும் போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டர் தடைசொன்னதின்மேல் அங்கிருந்து மகர்நோன்பிற்கு வந்தார்களென்றும் கூறப்படுகிறது.

**காங்கிரஸ் பிரசாரம்:**—கடந்த செவ்வாய்க் கிழமை மாலை சுமார் ரு-மணிக்கு கல்லுக்கட்டிக்குச் சமீபமிருந்து இவ்வூர் காங்கிரஸ் கோஷ்டியார் ஊர்வலமாகப் புறப்பட்டு கொப்புடையம்மன் சன்னதி வழியாக காந்திச் சதுக்கம் என்று பெயர் பெறும் மகர்நோன்புப் பொட்டலுக்கு வந்தார்கள். முன்னரே நோட்டீஸில் அறிவித்திருந்த வண்ணம் அங்கு ஓர் கூட்டம் நடைபெற்றது. சுமார் கரு0-ஜனங்கள் விஜயம் செய்திருந்தார்கள். திருவாளர்கள் கும்பலிங்கமும் பொ. திருகூடசுந்தரனாரும் சொற்பொழி வாற்றினர். திரு. திருகூடசுந்தரனார் ஆங்கில அரசாட்சியினால் இந்தியா அடைந்திருக்கின்ற கேவலநிலையையும், சுயராஜ்யம் பெறவேண்டியதின் அவசியத்தையும், உப்புச் சத்தியாக்கிரகத்தை ஆதரிக்க வேண்டியதின் இரகசியத்தையும் விளக்கமாகக் கூறி முடித்துவிட்டு கொஞ்சகாலக்குள் இன்னும் ஒரு கோஷ்டி சத்தியாக்கிரகிகளை வேதாரண்யத்திற்கு அனுப்பத் தீர்மானித் திருப்பதாக மொழிந்து, வந்திருந் தோரிடம் தொண்டர்களாகப் பேரைப் பதிவு செய்யும்படிக் கேட்டுக்கொண்டார். யாரும் முன் வரவில்லை. எனவே போவேசம்கொண்டு "நீங்கள் இன்னும் சத்தியாக்கிரகத்தை ஆதரிக்கவில்லையென்றால் உங்களை என்னவென்று கூறுவேன். இத்தக்காரைக்குடியை வெறும் பாலைவனமென்றும் ஜனங்களில்லாத ஓர் ஊரென்றும் கூறுமலிக்க முடியுமா" என்று பேசினார். எனினும் ஒரு தொண்டரேனும் சேரவில்லை.

சுமார் அ-சரு-க்குக் கூட்டம் கலைந்தது. வழக்கம்போல் கொஞ்சம் பணம் பிரிவுசெய்யப்பட்டது. அன்னிய ஆடைகளெதுவும் எரிக்கப்பெறவில்லை.

**ரயில் பாதை:**—புதுக்கோட்டை—மானாமதுரை ரயில்பாதை பெரும்பாலும் முடிவடைந்துவிட்டது. அதனைச் சோதிப்பதற்காக சென்ற வெள்ளிக்கிழமை (S. G. I.) ஸீனியர் சர்க்கார் இன்ஸ்பெக்டர் என்ற உத்தியோகஸ்தர் ஓர் வண்டியைவிட்டுப் பார்த்தார். அவருடைய பார்வையில் பாதை ஒழுங்காக இருக்கின்றதாம். எனவே அதிசீக்கிரத்தில்—பெரும்பாலும் கஉ அல்லது கரு-ந்தேதி—மானாமதுரைக்கு ரயில் விடப்படுமென்று சொல்லப்படுகின்றது.

**காலநிலை:**—சீதோஷ்ண நிலை சற்று திருப்திகரமாயிருக்கின்றது. மழை பெய்யுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது.

—

## மாளவ்யாஜி சிறை சென்றாரா?

பண்டிதமாளவ்யாஜி சிறைப்பட்டுவிட்டதாக பலமான வதந்தி உலாவுகின்றது. உண்மை நன்றாய்புலப்படவில்லை எனினும் அவருடைய புதல்வர் பண்டித கோவிந்தமாளவ்யா சிறையிலிருந்து இவ்வாறு எழுதுகிறார். நான் உள்ளே நுழைந்துவிட்டேன். பாபுஜீயும் (மாளவ்யாஜி) வந்துவிட்டார். காலாகங்கர் ராஜாவின் சகோதரர் சுரேஷூம் கூட இருக்கிறார்.

—

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்கு பிரயாணமாகும் விபரம் வருமாறு—

| கப்பல் | புறப்படும் தேதி |
|---|---|
| ரொஹிணு | ஜூன் கநிஉ |
| எல்லங்கா | ,, உகஉ |
| ரஜூலா | ,, உகூஉ |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணம் வந்து சேரும் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| எல்லங்கா | ஜூன் ககூஉ |
| ரஜூலா | ,, சகூஉ |

சிங்கப்பூர், சைகோன், ஈபோ, சைனா ஜப்பான் முதலிய முறைமுகங்களுக்கு கம்பெனியின் என்னும் கப்பல் புதுச்சேரியிலிருந்து ஜூன் கக௨ அஸேலிடிடோ என்னும் கப்பல் ஜூலை கூ தேதியும் பிரயாணமாகும்.

—

## திருத்தம்.

௨௨—ரு—௩0-ல் வெளியான குமரனில் க௨-ம் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் ஓரியண்டல் கம்பெனியின் ௩ வருஷ லாபப்பட்டியில் 53/3 என்றிருப்பதை 53,1/3 என்று திருத்தி வாசிக்க. (ப-ர்.)

—



## காரைக்குடி முனிஸிபாலிடி.

கடந்த சனிக்கிழமை (எ—கூ—௩0) மாலை ௬-மணிக்கு காரைக்குடி முனிசிப்பாலிட்டியின் ஓர் சாதாரணக்கூட்டம் சேர்மென் திரு. ஆவி பழ சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் கூடிற்று. கடு அங்கத்தினர்கள் பிரசன்னமாயிருந்தார்கள். (ஒருவர் கூட்டநடுவில் வந்தார்) விசிட்டர் காலரிகள் எல்லாம் ஜனங்களால் நிறைந்திருந்தன. வராண்டாவிலும் ஏராளமான விசிட்டர்கள் நின்று கொண்டிருந்தார்கள். மூன்று கான்ஸ்டேபிளுடன் போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டர் விஜயம்செய்திருந்தார்.

### கேள்விகளும் பதிலும்.

அஜண்டாவில் காட்டப்பட்டிருந்தபடி முதலில் திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியாருடைய கேள்விகள் வாதத்திற்கு எடுக்கப் பட்டன. அவற்றில் முதல் 8 கேள்விகளுக்கும் "நமது முனிஸிபாலிட்டி ஏற்பட்ட பிறகு ஒரு பொதுக் கிணறுக்கு சாங்கிஷன் செய்திருக்கின்றதென்றும் மொத்தத்திலிப்போது ச கிணறுகள் சாங்கிஷனாகி இருக்கின்றனவென்றும் எல்லாக் கிணறுகளும் இப்போது உபயோகிக்கக்கூடிய நிலையிலிருக்கின்றனவென்றும், இஞ்சினீயர் அவற்றைப் பார்வையிட்டு அடிக்கடி ரிப்போர்ட்டுக் கொடுக்கின்றாரென்றும் தலைவர் பதிலிறுத்தார். அவற்றில் ௬, ரு, எ, அ ஆகிய நாலு கேள்விகளும் "கேள்விக்கிடமில்லை" என்று தள்ளப்பட்டன.

### நா. லெ. நா. வீதி சந்துக்கு மெட்டல் போடத் தீர்மானம்.

முனிசிபல் கவுன்சில் கீழச்சத்திர வீதிக்கு வெள்ளைக்கல் மெட்டல் போட முன் தீர்மானித்திருக்கிறது. அதற்கு மெட்டல் போடும் போதே நா. லெ. நா. வீதிக்கும் மேற்படி வீதியோடு சந்திக்கு மிடத்திலிருந்து செக்காலை ரோட்டு சந்திப்பு மட்டுக்கு வெள்ளைக்கல் மெட்டல் போடவேணுமாய் இந்தக் கவுன்சில் தீர்மானிக்கிறது.

என்ற தீர்மானத்தை திரு சி மு அரு பிரேரேபிக்க திரு ச பீ ந மு ஈப்புராஹிம் ராவுத்தர் ஆமோதித்தார். அதனை திருவாளர்கள், அ ராம நா சித நாராயணன் செட்டியாரும் என் எஸ் வி யும் ராவ்பகதூர் ராமநாதன் செட்டியாரும் அவ் வீதிக்கு வெள்ளைக் கல் போட வேண்டியது அவசியமில்லையென்றும், பட்ஜட்டில் புரொவிஷன் போதாதென்றும், சாங்கிஷனை வைகள் முடிந்த பிறகு பார்த்துக் கொள்ளலாமென்றும் கூறி மறுத்தார்கள். உடனே,

மு ராம பெரி—சாங்கிஷன் செய்து வைப்போம். பிறகு பார்த்துக் கொள்ளலாம். சாங்கிஷனை உடன் எல்லாம் செய்யப்பட்டுவிடுகின்றனவா— வெறும் சாங்கிஷனால் கெடுதி ஒன்றும் வந்துவிடாது. என்று கூறினார். தீர்மானம் நிறைவேறியது.

பின்னர் ஜனங்களுடைய சௌகரியத்தை முன்னிட்டு புதுச்சந்தையில் தகர 'ஷெட்டு'கள் போடவும் புளி வேம்பு முதலிய மரங்கள் நட்டு வளர்த்தவும் செய்ய வேண்டுமென்ற ஓர் பிரேரேபணையை திரு சி மு அரு கொண்டுபோனார். திரு ச பீ ந மு ஆமோதித்தார். ஏகமனதாக நிறைவேறியது.

### வழியில் மரங்கள் வைக்க.

மீண்டும் திரு சி மு அரு செக்காலையிலிருந்து தேவகோட்டை நமது முனிஸிபல் எல்லைவரைக்கும் உள்ள ரஸ்தாவின் இருபக்கங்களிலும் மரங்கள் வைத்து வளர்க்க வேண்டுமென்ற தீர்மானத்தை பிரேரேபிக்க திரு ச பீ ந மு ஆமோதித்தார். தலைவர் முதலிய பலர் அதற்கிசைந்தனர். தீர்மானம் நிறைவேறியது.

### கல்லுக்கட்டிக்கிணறு.

கல்லுக்கட்டி வட மேற்கு மூலையில் இருக்கும் முனிஸிப்பல் கேணியில் கயமடகாலும் போட்டு தண்ணீர் இறைத்து வெயிற் காலங்களில் ஆடுமாடு குதிரை இவைகள் குடிக்கவசதி செய்ய வேண்டுமென்று ஓர் தீர்மானத்தை சி மு அரு பிரேரேபிக்கஅதை திரு சித நா ராம வானால் ஆமோதிக்கப்பட்டு நிறை வேறிற்று.

### வீதிகள் சுத்தம் செய்ய.

வீதிகள்தோறும் சுத்தம்செய்வதற்குக் கூட்டுகிறவனுடன் வார்டு பியூனும் கூடவே வந்திருந்து செவ்வனே நடத்தவேணுமாய் இந்தக்கவுன்ஸில் தீர்மானிக்கிறது என்ற தீர்மானத்தை சி. மு. அரு பிரேரேபித்தார். இது சிறிது நேரவாதத்திற்குப் பிறகு தலைவர் பியூன் கூடவந்திருப்பது சாத்தியமல்ல என்று சொன்னார். சி. மு. அரு. "கூடவே என்றவார்த்தையை எடுத்துவிட்டு சுற்றிப் பார்த்து என்றிருப்பது நலம்."

என். எஸ். வெ.—சுற்றிப்பார்த்து என்று மாற்றினாலும் அத்தீர்மானம் பார்ப்பதற்குச்சரியாகவில்லை. அதனையே அடியோடு திருப்பிஎழுதவேண்டும்.

தலைவர்:—அது அவசியமில்லை. பியூன் சுற்றிப்பார்த்து கையெழுத்து வாங்கட்டும். (இப்படியே தீர்மானம் நிறைவேறியது.)

### சிப்பந்திகள் சம்பளம்.

பிறகு சம்பளம் உயர்த்தவேண்டுமென்ற ஆபீஸ் கிளார்க்கு திரு. இராமசாமி ராஜூ திரு. சுந்தரேச ஐயா இஞ்சினியராபீஸ் கிளார்க்கு திரு. சீனிவாச ஐயர் திரு. தினகாசாமி நாயுடு பி. எஸ். மேஸ்திரிகள் சிவஞானம் பிள்ளை கண்ணபிரான் இவர்களுடைய மனுக்களும் தலைவன்ஸ் ரூபாய் இ-வேண்டுமென்ற ஆபீஸ் டெண்டர் ராமநாத ஐயர் ஷராப்பெரியணப் பிள்ளை இவர்களுடைய மனுக்களும் விவாதிக்கப் பட்டன எல்லாம் சாங்ஷனாயிற்று.

### பெண்கள் டிஸ்பென்சரி.

முனிஸிபல் பெண்கள் குழந்தைகள் டிஸ்பென்சரிக்கு ரூ. ஈகு-௧-கறு0-ல் ஓர் லேடி டாக்டர், ௩0-௧-௬0ல் ஓர் கம்பௌண்டர், ௩0-௧-௩ரல் ஓர் மருத்துவச்சி, இன்னும் வாச்சர், பியூன் முதலிய ஏழு சிப்பந்திகள் நியமிக்கவேண்டுமென்று மாதம் ௬-க்கு ரூ. ௧௩அ செலவிலுள்ள எஸ்டாபிளிஷ்மெண்ட் ஷெடியூல் அங்கீகரிக்கப்பட்டது.

### முன்ஸிபல் டிஸ்பென்சரி.

முனிஸிபல் ஆண்கள் டிஸ்பென்சரிக்கு ஓர் தோட்டி நியமிக்கவேண்டுமென்றுள்ள விஷயம் வாதத்திற்கு வந்தபொழுது ஜில்லா மெடிகல் ஆபீசரின் பரிசோதனை நோட்டு வாசிக்கப்பட்டது. இதில் இந்த ஜில்லாவிலுள்ள டிஸ்பென்சரிகள் யாவற்றினுள்ளும் இதுவே மிக மோசமானது; சமீபத்தில் பெண்கள் குழந்தைகள் ஆஸ்பத்திரி ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதில் தற்பொழுது மருத்துவச்சி (Midwife) வேலை பார்த்து வருகிறாள்; இது டாக்டர் பொன்னம்பலம் அவர்கள் மேற்பார்வையில் இருக்கிறது; ஓர் சிங்க் தொட்டி அவசியம் வேண்டும். போதிய அளவு மருந்து இல்லை, ஓர் தோட்டியையும் நியமிக்க வேண்டும் என்று குறிக்கப்பட்டிருந்தது. அதன்படி ஒரு தோட்டி நியமிக்கப்பட்டான்.

### சுயமரியாதைத் திருமணம்.

சிவகாமி—சிதம்பரனார்.

### வாரண்டு ஆபீசர்

வாரண்டு ஆபீசருக்கு ஒருபியூன் தேவை என்ற விஷயம் ஆலோசனைக்கு வந்தபொழுது தலைவர்:—தலைவர் ஜப்தி பண்ண உதவிக்கு ஆள் தேவையிருக்கிறது. சிலவற்றை வசூல் செய்ய ஒரு பியூன் அவசியம் தேவையாகத்தான் இருக்கிறது. ஆகலால் வேண்டுமா, வேண்டாமா என்பதைச் சொல்லுங்கள்.

ச. பீ. ந. மு—வாரண்டு ஆபீசர் என்ன வேலை செய்து வந்திருக்கிறார்? எத்தனை சம்மன்கள் சார்வ் செய்திருக்கிறார்?

சி. மு. அரு—பியூன் தேவையில்லை.

மு ராம—வாரண்டு ஆபீசர் எவ்வளவு வேலை செய்திருக்கிறார் என்று ஓர் நோட் வைக்கவேண்டும். பிறகு பியூன் வேண்டுமா என்பதை முடிவு செய்கிறோம். கடைசியாக, பியூன் தற்பொழுது தேவையில்லை என்று முடிவு செய்யப்பட்டது.

### மேஸ்திரி நியமனம்.

டி மு எக எ! செக்ஷன்படி ஆறுமாதத்திற்கு டெம்பரரியாக ஓர் மேஸ்திரி நியமனம் செய்திருக்கும் விஷயம் ரிக்கார்டு செய்யவந்தபொழுது அந்நியமனத்தின் தேவையைப்பற்றி விவாதங்கள் நடைபெற்றன. கடைசியில் திரு மு ராம பெரியணன் செட்டியார் மேஸ்திரி தேவையில்லை என்று 'டிசண்டு' செய்வதாகக் கூறினர். அப்படியே ரிக்கார்டு செய்யப்பட்டது.

### ஹெல்த்தாபீசர் நியமிக்க.

௧-௬-௩௧ முதல் ஹெல்த்தாபீசர் ஒருவர் நியமிக்கச் சம்மதம் கோரிய கடிதம் யோசனைக்கு வந்தது.

சி மு அரு —இப்போது தேவையில்லை.

மு ராம —இனிமேல் பார்த்துக்கொள்ளலாம் இதற்காக ஸ்பெஷல் பட்ஜட் தேவையில்லை.

என் எஸ் வி— கவர்ண்மெண்டிலிருந்து ௬-ல் ௩-பங்கு செலவு தரப்போகிறார்கள். அப்படியிருந்தும் நாமேன் ஒரு ஹெல்த்தாபீசர் நியமிக்காமலிருக்கவேண்டும் ௩-வருஷமாகிவிட்டால் கவர்ண்மென்டிற்கே வற்புறுத்தலாமென்ற சட்டமிருக்கிறது. அதனால் நியமிக்கவேண்டும்.

மு ராம— கவர்ண்மென்று ௩ பாகம் தருவதனால் வேண்டுமென்கிறீர்களா; அவசியத்தைப் பற்றிக் கேட்கின்றீர்களா?

ச பீ ந மு—இந்தமுனிசிப்பாலிட்டி குழந்தைப் பருவத்தி லிருக்கின்றது. இதற்கு இப்போது ஹெல்த் ஆபீசர் தேவையில்லை. ஸ்ரீவில்லிப்புத்தூர், திண்டுக்கல் முதலிய முனிஸிப்பாலிட்டிகள் இன்னும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஆகவே பொறுத்துச் செய்யலாமென்று எண்ணுகின்றேன்.

(அவ்வாறே ஒத்திவைக்கப்பட்டது,)

### டெலிபோன் வசதி.

அடுத்தபடியாக காரைக்குடி டிப்பார்ட்மெண்டில் டெலிபோன் ஏற்படுத்தும் விஷயம் ஆலோசிக்கப்பட்டுவருவதால்

## சுயமரியாதை சத்தியாக்கிரகக் கமிட்டி கூட்டம்.

திருநெல்வேலியில் ஜூன் க0 தேதி சுயமரியாதைச் சத்தியாக்கிரக் கமிட்டியின் கூட்டம் திரு. எஸ். ராமநாதன் எம். ஏ. பி எல்., அவர்கள் தலைமையில் ஹிந்து காலேஜில் கூடியது. அதுபோது சுசீந்திரம் சத்தியாக்கிரகத்தின் நோக்கத்தை முழுமனதுடன் ஆதரிப்பதாகவும், சில குறிப்பிட்ட மக்களைப் பொதுத்தெருக்களில் நடக்கக்கூடாதெனத் தடை செய்திருப்பதை அக்கமிட்டி ஒரு அறிக்கை மூலமாக திருவாங்கூர் அரசாங்கம் பிரஜைகளுக்கு செய்யவேண்டிய கடமை என்ன என்பதை யோசிக்கும்படி தூண்டப் போவதாக நிச்சயித்திருப்பதாயும், அவ்வாறு அறிக்கைக்குப் பின்னும் அரசாங்கம் தன் கடமையைச் செய்யத் தவறினால் சத்தியாக்கிரகக் கமிட்டியே சத்தியாக்கிரகத்தை நடத்துமென்றும் தீர்மானிக்கப்பட்டது. திரு. சிதம்பரம் அவர்களாலேயே அறிக்கையை இன்னும் இரண்டுவாரங்களில் திருவாங்கூர் அரசாங்கத்திற்கு அனுப்புவதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

—

## தந்திச் செய்தி.

இரங்கூன் மே சக-உ

| | |
|---|---|
| படகு நெல் | கறு௫ |
| ரயில் நெல் | கறு௫ |
| நாசெயின் சிறிய மில் அரிசி | ௩கூஉ |
| மீடான் வெள்ளை | ௩௬௫ |
| எஸ்க்யு நாகசெயின் | சகூ0 |
| எஸ்சயு மீடான் | சகஎ |
| கிடங்கு வெள்ளை | சஉ0, சரு0 |
| உளுந்து | ச௬0 |

—

கவுன்சிலின் தேவையைப்பற்றி தெரிவிக்க வேண்டுமென்ற திருச்சித் தந்திடிவிஷனல் இஞ்சினியர் கடிதம் ஆலோசனைக்கு வந்தது. சிலர் இது தேவையென்றும் சிலர் யோசித்துச் சொல்வோமென்றும் கூறினார்கள். அப்பால் முனிசிப் பாலிட்டிக்குத் தேவையென்று ரிக்கார்டு செய்யப்பட்டது.

### பிரசாரக் கமிட்டிக்கு டோல்வரி.

இராமநாதபுரம் ஜில்லா, மதுவிலக்குப் பிரசாரக் கமிட்டி வண்டிக்கு டோல்வரி விதிப்பதினின்றும் விலக்குவது சம்பந்தமான லெட்டர் ச பீ ந மு வால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறிற்று.

இந்தத் தருணத்தில் ராவ்பகதூர் மரு சுப்பையாச் செட்டியாரவர்கள் எழுந்திருந்து தலைவரிடம் "அப்பீல் கமிட்டி தேர்தல் விஷயத்தை எடுத்துக் கொண்டால் வெளியில் போகிறவருக்கிறவர்களுக்குச் சௌகரியமாயிருக்கு" மென்றார். உடனே அப்பீல் கமிட்டி விஷயமெடுத்துக் கொள்ளப்பட்டது.

திரு மு ராம பெரியணன் செட்டியாரவர்கள் சிப்பந்திகள் ஸ்டாண்டிங் அப்பீல் கமிட்டிக்கு திரு மெ செ சிதம்பரம் செட்டியாரவர்களை மெம்பராக நியமித்து அவர்களையே சேர்மனாகவும் நியமிக்க வேண்டுமென்று பிரேரேபித்தார்கள். இதனை திரு. கா வ பழனியப்பச் செட்டியாரவர்கள் ஆமோதித்தார் ஏகமனதாக நிறைவேறிற்று.

பிறகு கூட்டத்தை ஒத்தி வைக்கவேண்டுமென்று திரு மு ராம பிரேரேபித்தார். அதனை கா வ பழ ஆமோதித்தார்.

திரு சித நா ராம நாராயணன் செட்டியார்—கோரமிருந்தால் நடத்தலாமே.

மு ராம—கோரத்தைப்பற்றி என்ன பேச்சு. நான் ஒரு பிரப்போஸல் கொண்டு வந்திருக்கிறேன். அதனை ஆதரிக்கவோ மறுக்கவோ செய்யுங்கள்.

ராவ்பகதூர் ராம—நான் மறுக்கின்றேன். திரு சித நா ராம நாராயணன் செட்டியார் நான் அதனை ஆமோதிக்கின்றேன்.

மு ராம—நான் ப்ரபோசல் கொண்டு வந்தேன், ஒருவர் ஆமோதித்தார் இருவர் மறுக்கின்றார்கள். என்ன செய்ய வேண்டுமோ சட்டப்படித்தலைவர் செய்யட்டும்.

தலைவர்—மாற்றிவைப்பதைப்பற்றி ஆட்சேபமில்லை. சமீபத்தில் சௌகரியமாக கூட்டத்தைக்கூட்டிவிடலாம்.

அப்பால் கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டது.

—

## வேதாரண்யம் சட்ட மறுப்பு.

வேதாரண்யம் உப்புப்போர் போலீசாரால் பற்பல வழியாலும் அழிக்க முயற்சிக்கப்படுகின்றது. தினந்தோறும் பல தொண்டர்கள் கைது செய்யப்படுகின்றார்கள். ஜூன் ௨௩ தேதி சத்தியாக்கிரகப் பணத்தினால் கட்டப்பட்டிருந்த ஓர் ஆசிரமம் இடிக்கப்பட்டுவிட்டது. ஜூன் ௧, ௨, ௩ ஆகிய தேதிகளில் கோடிக்கரை, பன்னால், அகஸ்தியம்பள்ளி ஆகிய விடங்களில் சுமார் ௨௦ தொண்டர்கள் கைது செய்யப்பட்டார்கள். ஜூன் ௨ ந்தேதி அகஸ்தியம் பள்ளியில் கைது செய்யப்பட்ட ௧௩ தொண்டர்களில் ௩ பேருக்கு தலா ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

ஜூன் ௩ தேதி வேதாரண்யத்தில் இரண்டு தினங்களுக்கு முன் கைது செய்யப்பட்டிருந்த திருவாளர்கள் எஸ். கணேசன், கோபால சாஸ்திரி, வேறு அ தொண்டர்கள் ஆகியவர்கள் விசாரித்து விடுதலை செய்து ரயில் சத்தம் கொடுத்து ஊருக்கனுப்பப்பட்டார்களாம்.

௩௨ திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியாருக்கும் ராமச்சந்திராயுடுவுக்கும் விதிக்கப்பட்ட ௫௦௦ ரூபாயையும் வசூலிப்பதற்காக வேதாரண்ய ஆசிரமத்திலிருந்து கைப்பற்றப்பட்ட பல சாமான்கள் ஏலம் போடப்பட்டன. ஏலம் கேட்கயாரும் முன்வரவில்லை. ௪ முறை ஐந்து முறை கூப்பிட்டும் சாமான்களை வாங்குவார் யாருமிலராயினர். எனவே மீண்டும் ௪ தேதி ஏலம் போட்டார்கள். அதன் பயனாக சுமார் ௨௫௦௦ ரூபாய் பொறுமானமுள்ள சாமான்கள் ௩௦௦ ரூபாய்க்குப் போயிற்று. மீதியான பல பொருட்கள் கையிலிருக்கின்றன. அவை வேறு ஊர்களுக்குக்கொண்டு செல்லப்படுமென்று தெரிகிறது.

மேற்கூறிய ஏலம் நடந்துகொண்டிருக்கும்போது காரைக்குடித் தொண்டர்களும் வேறு பல ஊர்களிலுமுள்ள தொண்டர்களுமாக சுமார் ௫௦ பேர் செயிண்டு தாமஸ் அவர்களின் தலைமையில் வேதாரண்யம் ரயில்வே ஸ்டேஷனை அண்மினார்கள். அண்மியதும் போலீசார் இவர்கள் கலகக் கூட்டத்தார் என்று கூறி தலைவர்களைக் கைது செய்துவிட்டுத் தொண்டர்களை மாத்திரம் திருச்சிக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.

௫ தேதி காலையில் இதே மாதிரியான இன்னொரு கோஷ்டி அங்குவர அவர்களையும் இவ்வண்ணமே கொண்டுபோய் விட்டார்களாம். இப்போது வேதாரண்யத்திற்கும் திருத்துறைப்பூண்டிக்கும் இடையில் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ரஸ்தாக்களிலுள்ள சந்திப்புகளில் போலீசார் காவல் வைக்கப்பட்டிருக்கிறது. புதிதாகவரும் தொண்டர்களை ஆங்காங்கே கைதுசெய்து தடை செய்துவிடலாமென்பது அவர்களது உத்தேசம்.

---

### பி. அளகாபுரி டோர்ணமெண்ட்.

ஸ்ரீகலங்காத கண்டவி நாயகர் பந்தடி மாலின் ஆதரவில் ஆனி-மீ ௨-௨ முதல் பாட்மிண்டன் டபிள்ஸ் டோர்ணமெண்ட் நடைபெறும். அதில் சல டீம்கள் கலந்து கொண்டிருக்கின்றன. ஆனி-மீ ௨௫-௨ பைனல் விளையாட்டு நடைபெறும் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

## டில்லியில் தீ.

### 15-லட்சம் ரூபாய் சேதமாயிற்று.

ஜூன் ௩ தேதி மாலையில் டில்லியிலுள்ள சந்தினி சௌக்கில் ஓர் பெரிய தீ விபத்து ஏற்பட்டது. அங்கு இதுவரையிலும் ஏற்பட்ட தீ விபத்துகளில் மிகப் பெரியதாகும். இரவு ௩௦ மணிக்குள்ளாக ௨௨ கடைகள் எரிந்துபோயின. காற்று பலமாக அடிக்கத் தொடங்கியதால் ஜனங்களுக்கு மிகுந்த பயத்தைக் கொடுத்தது. முதலில் நாஷனல் பாங்கு அப் இந்தியா ஆபீசுக்குக் கீழிருக்கும் கடைகளில் ஒன்றில்தான் தீப்பற்றிற்றும். வெகு சீக்கிரத்தில் அருகிலுள்ள கடைகளும் மேன்மாடிகளும் தீக்கிரையாயின. தீயணைக்கும் எஞ்சின் வந்து மிகப் பிரயாசைப்பட்டுப் பார்த்தும் காற்றின் கொடுமையாலும், தீயின் ஆதிக்கத்தாலும் கொஞ்சநேரம் ஒன்றும் செய்ய முடியவில்லை. இப்போது மொத்தம் ௩௦ கடைகளும் அவற்றின் மேன்மாடிகளும் நஷ்டப்பட்டுப்போயிருப்பதாகக் கூறப்படுகிறது.

மேஜாங்கள் கடியாரங்கள் மூக்குக் கண்ணாடிகள் ஆகிய சாமான்கள் வியாபாரம் செய்யும் கடைகளும், இங்கிலீஷ் பாரிவர்த்தனைப் பாங்கியும் இதர ஆபீசுகளும் சாம்பலாயின. தீப்பற்றிய காரணம் தெரியவில்லை. சுமார் ௧௫ லட்சம் ரூபாய்க்கு மேல் நஷ்டப்பட்டிருக்குமென்று தெரிகிறது. நாஷனல் பாங்கி ஒன்றுதான் இன்ஷூர் செய்யப்பட்டிருக்கின்றது. டிப்டிக கமிஷனரும் இதர உத்தியோகஸ்தர்களும் ஸ்தலத்திற்கு வந்திருக்கின்றார்கள். அவர்கள் தீயின் மர்மம் என்னவென்று விசாரணை செய்து வருகின்றார்கள்.

நஷ்டமான கட்டிடங்களுக்குள் முக்கியமானவை இரண்டு. அவை பஞ்சாப் நாஷனல் பாங்குக் கட்டிடமும் இந்திய நாஷனல் பாங்குக் கட்டிடமுமாம். பஞ்சாப் பாங்கு முன்னதாகவே மாற்றப்பட்டுவிட்டபடியால் இந்தத் தீவிபத்தால் பாதகமடையவில்லை. இந்திய நாஷனல் பாங்குக் கட்டிடத்திலிருந்த பணத்தையும் தஸ்தாவேஜுகளையும் பத்திரமாக அப்புறப்படுத்திவிட்டார்கள்.

---

### கரைசேராக் கட்டை.

கடந்த சில தினங்களாக சென்னை திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஓர் அதிசயத்தைத் திரள் திரளாக ஜனங்கள் சென்று பார்த்துவருகின்றார்கள். இவ்வதிசயத்திற்கு ஆஸ்பதமாயிருப்பது ஓர் கருப்பு நிறமான கட்டையாகும். இது கரையில்வராமல் கடலிலேயே மிதந்துகொண்டிருக்கின்றது. இதனை நாகையிலிருந்து திருவொற்றியூருக்குச் சமாதியடையப் போகும் ஒரு பெரியாரின் உடலென்று சொல்லுகிறார்கள். இதனைத் தொட்டவர்கள் அல்லது இடியவர்கள் இரத்தமாக கக்கி இறந்துவிடுவார்களென்றும் தொடும்போது அதிலிருந்து குருதி வெளி வருகின்றதென்றும் ஜனங்கள் பேசிக்கொள்கிறார்கள். எக்காரணத்தாலும் அது கரையை அடையாமலிருப்பதால் ஜனங்களுக்குள் பரபரப்பை உண்டுபண்ணுகின்றது. எனவே கூடம் முதலியவற்றைக்கொண்டு பூசைபோடும் மக்களுக்கு எல்லையில்லை. இக்கட்டையை ஆராய்ச்சி செய்து சிலர் நங்கூரத்தின் ஓர் துண்டும் என்றும் கனமான பொருளாகையால் ஆழத்திலேயே மெதுவாக மிதக்கின்றதென்றும் கூறுகிறார்கள்.

---

## நோட்டீஸ்.

1928ஹு O. S. No. 20.
1930 E. P. No. 17.

சிவகெங்கையிலிருக்கும் G. V. கணேசய்யர் } வாதி

சிவகெங்கையிலிருக்கும் வெங்கிடசாமி ராசுவாகிய குட்டிராசு வகையரு } பிரதிவாதிகள்

வாதி வக்கீல் C. வெங்கிடராமய்யர் இதனால் சகலமான பேர்களுக்கும் தெரிவிப்பதென்னவென்றால்:—

வாதிக்கு 1, 2, 3, 4 பிரதிவாதிகளுக்குப்பாத்தியமான அடியிற்கண்ட சொத்துக்களை ஈடு வைத்திருந்ததில் ஷை சொத்துக்களின் பேரில் வியாஜ்ஜியம்செய்து அடியிற்கண்ட ஈடுசொத்துக்கள் அ-எ-௩௦ தேதி இந்த கோர்ட்டு முன்பாக ஏலம் போடப்படுமென்பதை அறிவித்திருக்கிறேன்.

### சொத்துக்கள்விபரம்

இராமனாதபுரம் டிஸ்டிரிகட்டு சிவகெங்கை சப் டிஸ்ரிகட்டு கஸ்பா சிவசிவகெங்கையில் ராஜாத் தெருவில் கிழமேலோடிய ரெட்டை அக்கிரகார வீதிக்கும் தெற்கு கு. நா. குப்புசாமி ராசு வீட்டுக்கும் சந்துப் பாதைக்கும் கிழக்கு பெ. நா. நாராயணராஜா வீட்டுக்கும் கிழமேலோடிய சந்து பாதைக்கும் வடக்கு, பெ. வெங்கிடசாமி ராஜா வீட்டுக்கும் மேற்கு, இதற்குள்ளான கிழமேல் சுமார் காலடி ௩௦. தென்வடல் சுமார் காலடி ௫௦ அளவுள்ள மனை நிலமும் கொல்லையும் அதிலடங்கிய யாவற்று மேல் சாமான் கதவு நிலை உள்பட கெட்டி மச்சு தாரீஸ் கட்டிடம் ஒன்றும் ஓட்டுக் கட்டிடம் ஒன்றும் இவைகளை சேர்ந்த மேல் மாடியும் ஜெலதாரை முதலிய பாத்தியங்களும் ஷை மனை வீடு வகையரு யூனியன் நம்பர் 105.

2 ஷை டிஸ்ரிகட்டு மானாமதுரை சப் டிஸ்ரிகட்டு மானாமதுரை தாலூகா சேகரத்தில் நாகப்ப பிள்ளை ஊரணிக்கும் கிள்ளுக்குடி யெல்லைக்குத் தெற்கு புது குளம் காலாங்கரைக்கும் அய்யனார் கோவிலுக்கும் மேற்கு அரசுகுளம் கண்மாய்க்குப் நீரப்பிடிக்கும் செங்கட்டி யெந்தல் யெல்லைக்கும் வடக்கு தோப்புமடை இடையங்குளம் வயலுக்கும் காமனைக்குடி யெல்லைக்கும் ஆவடியேந்தல் யெல்லைக்கும் கிழக்கு இதற்குள் குவளவேலி கிராமம் ஒன்றில் கிராமம் அரைக்குகெணிக்கா பாகம் ௨எ-ல் புத்தடி செய்மாளவாய்க்கால் கரையில் பங்கு மூன்றில் 1 முதல் 4 வரை பிரதிவாதிகள் சொந்த பங்கு இரண்டுக்கு மேல் வாரபாத்தியம் சுமார் நஞ்சை செய் ஆறு புஞ்சைகுருகாம் ஏழு இவைகளும் ஷை இரண்டு பங்குக்கு சேர்ந்த சகல பாத்தியங்களும் இரண்டாவது லெக்க பங்கில் பங்கு அரையை வெங்கிடாஜல ராஜா பாரி ஆதி லெட்சுமி அம்மாளுக்கு ரூ ௩௦௦க்கு ஒத்திவைத்திருப்பதற்கு மேலுள்ள பாத்தியத்தையும் மற்ற சொத்துக்களும் ஷை கிராம பங்கு மரக்கால் கட்டாய் அனுபவித்து வருவதால் இருநாங்கெல்கை காணப்படவில்லை.

சிவகங்கை 5—6—30 } C. வேங்கட்டராமன். வாதி வக்கீல்.

---

## நோட்டீஸ்.

தேவகோட்டைடி. மு. கோர்ட்டு, 1929 ஹு S. C. No. 1029.

தேவகோட்டையிலிருக்கும் முத்து க. அ. லெ. அண்ணாமலை செட்டியார், } வாதி.

எழுவங்கோட்டை தாலூகா கண்ணங்கோட்டையிலிருக்கும் லேட் பெரியகருப்பனம்பலம் மகன் கருப்பய்யா. } 3-ம் பிரதிவாதி.

மேற்படி வாதி என்பவருக்கு 1-ம் பிரதி வாதி சின்னய்யா அம்பலமும் 2 முதல் 7 பிரதி வாதிகளின் அவிபக்ததகப்பனார் லேட் பெரிய கருப்பனம்பலமும் 24—11—26-ல் ரூ. 200-க்கு மீ 1-க்கு 100-க்கு 1-வீதம் வட்டி கண்டு எழுதிக்கொடுத்திருக்கும் பிரும்சேரி நோட்டின் பேரில் வாதி மேற்படி நிம்பரில் பிராதுசெய்து வாய்தா 17—6—30-உ போடப்பட்டிருக்கிறது.

மேற்படி பிரதி வாதிக்கு ஆக்ஷேபணையிருந்தால் மேற்படி வாய்தாவில் கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவேண்டியது. தவறினால் மேற்படியாரை எக்ஸ்பார்ட்டி செய்து பைசல்செய்யப் படுமென்பதை இதன் மூலம் அறியவும்.

ஸ்ரீனிவாச இராகவன்,
வாதி வக்கீல்.
2—6—30

---

## ஜோதிடம்

தர்ம நியாயமான 5 கேள்விகளுக்குபதில் எழுத ரூ 1. மேல் ஒவ்வொருகேள்விக்கும் அணா 4. ஜாதக நகல் அல்லது கடிதம் எழுதும் போதுள்ள நேரம் ஏதாவதொன்று எழுத வேண்டும். வி. பி. செலவு அணா 4.

ஹனுமான் ஜோதிஷ ஆபீஸ்,
திருத்தணி S இந்தியா.

---

## விலை சரசம்.

உலகமெங்கும் புகழ்பெற்ற மலையாளம் உயர்ந்த ஜவுளி பட்டு இனுசுகள். விலைச் சிரம்பவும் குறைந்து விட்டன. விலை விபரஜாப்தா இனாம்.

மானேஜர்,
S. K. R. வீவிங் பாக்டரி,
கோட்டார்
திருவாங்கூர் தென் இந்தியா.

---







## நமது தபால் பெட்டி.

### ஆலவேலி.

தேவகோட்டை ரேஞ்சுப்பள்ளிக் கூடங்களின் இன்ஸ்பெக்டர் திரு. பாலகிருஷ்ணன் B. A., L. T., அவர்கள் மனைவியின் சீமந்தம் ௧—௬—௩௦ காலை ௭-மணிக்கு மாயவரம் தாலூகாவைச்சேர்ந்த ஆலவேலி கிராமத்தில் பார்ப்பனீயம் நீக்கலாக நடத்தப்பெற்றது. சமயம் பல பிரமுகர்கள் விஜயம்செய்திருந்தனர் என்று ஓர் அன்பர் எழுதுகிறார்.

### திருமாஞ் சோலை.

மதுவிலக்குக் கமிட்டி:—இன்று மாலை ௬-மணிக்கு சேர்மன் திரு. S. ராமச்சந்திரன் அவர்கள் தலைமையின் கீழ் பொதுக் கூட்டமொன்று கூட்டப்பட்டது. மேற்படி கமிட்டி செக்ரெட்டெரி T. P. துரை அவர்களும் திரு. S. சங்கிலிபாண்டியன் சேர்வையவர்களும் இன்னிசை பாடல்களுடன் படக்காக்ஷி விமரிசையாய் காண்பித்தார்கள். பிரசாரகர் திருமிகு. V. ஆறுமுகம் சேர்வையவர்களும் திரு P. வேதமாணிக்கம் அவர்களும் மதுவிலக்கைப் பற்றி வெகு தெளிவாக பிரசங்கம் செய்தார்கள். சுமார் இருபத்தைந்து பேர்வரை மதுபானத்தை விட்டுவிடுவதாக உறுதி கூறினார்கள் என்று திரு. தொரை அவர்கள் அறிவிக்கிறார்.

### இடையமேலூர்.

இராமநாதபுரம் ஜில்லா மதுவிலக்குப் பிரசாரம்:—26-5-30 இவ்வூரில் மாலை ௬-மணிக்கு மேற்படி கமிட்டி சேர்மன் திருவாளர் S. ராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் ஒன்று கூடப்பட்டது. ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். பிரசாரகர் V. ஆறுமுகம் சேர்வையவர்கள் மதுவிலக்கைப்பற்றி விரிவான உபந்நியாசம் செய்தார்கள். மேற்படி கமிட்டி செக்ரெட்டரி திரு. T. P. துரை அவர்களும் பிரசாரகர் திரு. S சங்கிலி பாண்டியன் சேர்வையவர்களும் படக்காக்ஷியை தெளிவாகக் காண்பித்தார்கள். திரு. S. சங்கிலிபாண்டியன் சேர்வையவர்களால் மதுவிலக்கு பாடல்கள் பாடப்பட்டன.

### ஆழ்வார் குறிச்சி.

வாலிபர் ஒற்றுமைச் சங்கம்:— இச்சங்கத்தின் இரண்டாவது ஆண்டு நிறைவுவிழா ௨௫-௫-௧௯௩௦ காலை ௯ மணிக்கு சேர்மாதேவி தாலூக்கா போர்டு பிரசிடெண்டு, கே. ஏ. சிவஞானம் பிள்ளை அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது.

தலைவர் அவர்களுக்கு வரவேற்புப் பத்திரமும், அறிக்கைப்பத்திரமும் காரியதரிசி எம். பி. ஆர். சுப்பையா முதலியாரால் வாசிக்கப்பட்டன.

திருநெல்வேலி இந்துக் காலேஜ் தலைமைத் தமிழாசிரியராகிய, எம். சி. சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் கல்வியைப் பற்றி எடுத்துப் பேசினார்கள்.

அன்றுமாலை ௫ மணிக்கு அங்கத்தினரால் தேக்கச்சேரி கொடுக்கப்பட்டு புகைப்படம் ஒன்று எடுக்கப்பட்டது. ௧௨ வயதுள்ள சிறுவன் ஞானசபபந்தமென்பவன் அப்பூதியடிகள் நாயனார்சரித்திரத்தைநடத்தினான். தேவாரம் இன்னிசையுடன் பாடப்பெற்றது.

கடைசியாகக் காரியதரிசி வாழ்த்துக்கூற இரவு ௮ மணிக்கு கூட்டம் முடிவு பெற்றது என்று இளைஞர் ஒற்றுமை சங்கக் காரியதரிசி தெரிவிக்கிறார்.

### அரிமழம்.

ஸ்ரீ 'மீனாக்ஷி சுந்தரவிலாஸ்' வாசகசாலையின் இரண்டாவது ஆண்டு முதல் வருஷாரக்கூட்டம் நிகழும் பிரமோதூத ஹு வைகாசி௫ ௩௦ ௪ மணிக்கு புதுப்பட்டி வக்கீல் திரு. அரிதீர்த்தமய்யரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் புதுப்பட்டி வக்கீல் திரு. நடேச சாஸ்திரியாரவர்கள் 'பிறப்பின் பயன்' என்ற விஷயமாய் இரண்டரை மணி நேரம் மிக அழகாகப் பேசினார்கள். தலைவர் முடிவுரையுடனும் வந்தனவாழ்த்துடனும் கூட்டம் இனிது நிறைவெய்தியது என்று லெ. செ. சோமசுந்தரன் காரியதரிசி எழுதுகிறார்.

### புதுவயல்.

சாரதா விலாஸ் பந்தடிமால்:—ஈசனது ஆனித் திங்கள் எட்டாந்தேதி இவ்வூரில் இருவர்களாகச் சேர்ந்து பந்தடி பரிசு பெறும் விளையாட்டு நடைபெறும். ௬௭ ந்து ஆனிமாதம் இரண்டாந்தேதி (நிகழ்ச்சி) பாலட்டு குலுக்கப்படும். அதில் சேரவிரும்பும் ஒவ்வொரு ஜதையும் முதல் தேதிக்குள் தங்களுக்கு அறிவித்து மூன் கட்டணம் ரூபாய் ஒன்று அனுப்பிவைக்க வேண்டுமென்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

### ஆயுர்வேதத் தரும ஆஸ்பத்திரி.

காரைக்குடி ஆயுர்வேதத் தருமாசுப்பத்திரியில் மே-மாத இறுதிவரையில் சிகிச்சை செய்யப்பட்ட பிணியாளிகள் மொத்தம் ௩௨௨௪-என்றும் அவரில் ௧௩-பேர் இருந்தவர் அ௫-பேர் மகமதியர்கள் ௩௧௦-பேர்கள் இந்துக்கள் என்றும அவ்வாஸ்பத்திரி அதிகாரிதெரிவிக்கிறார்.

### கும்பாபிஷேகம்.

காரைக்குடி திருவாளர் அ. மு. க. அவர்களால் பெரும் பொருள் செலவிட்டு பாபநாசம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இரண்டுமைலுக்கப்பாலிருக்கும் மட்டயார்திடல் என்னுமூரில் கட்டப்பட்டிருக்கும் நித்திய கல்யாணி அம்மான் சமேத ஸ்ரீ கைலாசநாதஸ்வாமி ஆலயத்தில் வருகிற ஆனி மாதம் ௨௬-தேதி அதிவிமரிசையாகக் கும்பாபிஷேகம் நடைபெறும். ரயில்வசதி அதிகமிருப்பதால் அன்பர்கள் ஏராளமாகவந்து கண்டு களிக்கலாம் என்று ஓரன்பர் தெரிவிக்கிறார்.

### மதுரை.

நாயர் இலவச வாசகசாலை:—மதுரை நாயக்கர்புதுத் தெருவில் திறவப்பட்டிருந்த ஷை வாசகசாலையும் சங்கமும் ஜூன் ௧-தேதியிலிருந்து மதுரை கமலத் தோப்புத் தெருவிலுள்ள ௧௩-ம் நம்பர் கட்டிடத்திற்கு மாற்றப்பட்டிருக்கின்றதென்று சங்கத்தின் உதவிக்காரியதரிசி அறிவிக்கிறார்.

### செய்கோன் முருகானந்த வாசகசாலை.

டிபார்ட்டி:—௧—௬—௩௦-ல் காரியதரிசி திரு. பழ. கும. குமரப்ப செட்டியாரவர்கள் தாய்நாடு செல்லும்பொருட்டு பிரிவு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுப்பதை முன்னிட்டு மாலை ௩-௩௦-க்கு ஸ்ரீமான் வீர. மு. முத்துக்கருப்பஞ் செட்டியார் பி. ஏ., அவர்களின் தலைமையின் கீழ் ஓர் கூட்டம் கூட்டப்பட்டது. சுமார் ௨௦௦- அங்கத்தினர்கள் வரை விஜயஞ் செய்திருந்தார்கள். சகலருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டு தேநீர் விருந்து முடிந்தது. கடந்த கூட்டத்தின் நடவடிக்கைகள் திரு. லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களால் வாசிக்கப்பெற்று சகலராலும் ஆமோதிக்கப்பட்டது. பழ. அழகப்பா அவர்களால் பிரிவு உபசாரப்பத்திரம் வாசித்துக்கொடுக்கப்பட்டது.

புதுக்காரியதரிசியாக திரு அ சி. பழ. சோம. இலட்சுமணன் செட்டியாரவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

புதுக்கோட்டை தேசஊழியன் பத்திராதிபர் திரு. நாகரெத்னம் அவர்கள் சங்கத்தின் அவசியம்மென்பதுபற்றி மிகவுருக்கமாகப் பேசினார்கள்.

தலைவரவர்கள் காரியதரிசி திரு குமரப்ப செட்டியாருக்கு ஏற்பட்ட கடமையை வெகு அன்பாக நடத்திவந்ததைப் பற்றியும் இன்னும் அவர்களுடைய பொது ஜன சேவையைப்பற்றியும் வெகு விவரமாகவும் உருக்கமாகவும் பேசி முடித்தார்கள்.

காரியதரிசி திரு. குமரப்ப செட்டியார் என் சிறிய செயலில் பிரிவுபசாரப் பத்திரத்திலும் தலைவரவர்களின் முகவுரையிலும் புகழ்ந்து கூறப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட செயல ஒன்றும் செய்ததாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் நான் காரியதரிசியாக இருந்தகாலத்தில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் திரு. முத்துக்கருப்பஞ் செட்டியாரவர்களுடைய உதவியும் இன்னும் அநேக தனவைசிய வாலிபச் சகோதரர்களுடைய உதவியுமே முக்கிய காரணமாகும் என்று பதில் கூறினார். மாலை ௯ மணிக்குக் கூட்டம் கலைந்தது என்று மேற்படி சங்கக் காரியதரிசி தெரிவிக்கிறார்.

---

## நோட்டீஸ்.

சிவகெங்கை சப் கோர்ட்டு,
1918-ஹு O. S. No. 70
1929-ஹு E. P. No 58.

நல்ல கருப்பன் செட்டியார் வகையரு } வாதிகள்

சீனிவாசப்பய்கார் வகையரு … … … } பிரதி வாதிகள்

வாதிகள், பிரதிவாதிகள் வகையறப் பேரில் டிக்ரி பெற்று அடியில் கண்ட சொத்துக்கள் மேற்படி டிக்ரியை நிறைவேற்றியதில் 8-7-30 தேதி பகல் 2 மணிக்கு டிக்ரி மொத்த தொகைக்கு சிவகெங்கை சப்கோர்ட்டில் ஏலத்துக்கு வருகிறது. கேட்க அபிப்பிராயப்படுகிறவர்கள் ஏலத்தில் கேட்கலாம். சொத்துக்களை தாங்கள் ஏலத்தில் எடுத்து டிக்ரித் தொகையில் செல் வைத்துக்கொள்ள மனுக்கொடுத்து 24-6-30உ வாய்தா யேற்பட்டிருக்கிறது. ஆட்சேபணையுண்டானால் தெரியப்படுத்திக்கொள்கிறது தவறினால் வாதிகள் கோருதல்படி அனுமதி கொடுக்கப்படும்.

### சொத்து விபரம்

1 இராமனாதபுரம் டி. திருப்பத்தூர் சப் டி. திருக்களக்குடி தேவஸ்தானம எருமைப்பட்டிக் கிராமத்தில் கீழச் செம்மானி வயலிலும், பொக்குளியாண்டி அம்பலம் மாமரத்துப் புஞ்சைக்கும், லெ. பொ. ஆண்டியப்பனம்பலம் புஞ்சைக்கும் மேற்கு, கயினப்பன் ஒத்தி வாங்கியிருக்கிற தோட்டத்துக்கும் வடக்கு, வாய்க்காலுக்கும் கிழக்கு, கண்மாய்க்கரைக்கும் தெற்கு, இதற்குள்ளானதும் 1912-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 13-ந்தேதியில் செம்மானிப்பட்டி சுந்தரராஜப்யங்கார் புத்திரன் பாமசாமி அய்யங்காரிடம் தென்புறம் பாதிக்கு செய் காணியாரைக்காணிக்கு செண்டு 66.

2 புஞ்சை தருக்கம் 0—4—0-ல் கீழ்புறம் குருக்கம் 0-2-0 செண்டு 22.

3 மேற்படி தேதியில் மேற்படி பாமசாமி அய்யங்காருக்கு தம்பியும் வெங்கிட்டராமய்யங்காருக்கு சுவிகார புத்திரனுமான ஸ்ரீனிவாசய்யங்காரிடம் வடபுறம் பாதிக்கு செய் காணியரைக்காணிக்கு செண்டு 66.

4 புஞ்சை தருக்கம் 0-4-0ல் மேற்புறம் பாதிக்கு குருக்கம் 0-2-0 செண்டு 22.

5 மேலூர் சப் டி. கொக்கம்பட்டி கிராமத்தில் செம்மினிக் கண்மாய் பாவில் அயன் சர்வே நஞ்சை 103-நிம்பர் செண்டு 34 சர்வே நிம்பர் 47/8 செண்டு 50.

6 157 நிம்பர் அயன் நஞ்சை ஏக்கர் 1.ம் செண்டு 20-ம் ரீசர்வே நிர். 53/1 ஏக்கர் 1 செண்டு 15.

7 அயன் சர்வே 158 நிம்பர் டி லெட்டர் செண்டு 12 ரீசர்வே நிம்பர் 49/8 செண்டு 11.

8 372 நிம்பர் பி லெட்டர் செண்டு 50 ரீசர்வே நிம்பர் 131/11 செண்டு 46.

9 அயன் சர்வே 235 நிம்பர் ஏ லெட்டர் செண்டு 98. ரீசர்வே நிம்பர் 80/6 தென்புறம் செண்டு 98.

10. 259 நிம்பர் நஞ்சை செண்டு 50. ரீசர்வே 86/18-க்கு செண்டு 48.

11. அயன் சர்வே 271 நிம்பர் டி லெட்டர் செண்டு 66. ரீசர்வே 86/16 செண்டு 72.

12. அயன் சர்வே 256 நிம்பர் டி லெட்டர் செண்டு 40 ரீசர்வே 84/6 செண்டு 21.

13. அயன் சர்வே 270 நிம்பர் வி லெட்டர் செண்டு 10 ரீசர்வே 87/21 செண்டு 7. 87/17 க்கு செண்டு 12. 87/15 க்கு செண்டு 12.

14. அயன் சர்வே 245 நிம்பர் செண்டு 10 ரீசர்வே 80/1 க்கு செண்டு 31.

15. 246 நிம்பர் அயன் சர்வே ஏ லெட்டர் செண்டு 39 ரீசர்வே 80/6 க்கு செண்டு 39.

16. 414 நிம்பர் ஏக்கர் 1ம் செண்டு 55 ம இதில் கீழ் பாதி ரீசர்வே நிம்பர் 135 A செண்டு 82, மேற்படி 135. 1 13 செண்டு 82.

17. மேற்படி சப்டிக்குச் சேர்ந்த கருங்காலக்குடி கிராமம் புரவு வயலிகுளம் வயலில் அயன் நஞ்சை சர்வே 918 நிம்பர் ஏக்கர் 1 செண்டு 15.

18. 933 நிம்பர் பி லெட்டர் நஞ்சை செண்டு 66.
19. 934 நிம்பர் ஏக்கர் 2 செண்டு 73.
} ரீசர்வே நிம்பர் 403. 1 ஏக்கர் 3 செண்டு 37.

20. அயன் சர்வே 919 நிம்பர் நஞ்சை ஏக்கர் 1 செண்டு 41 ம் ரீசர்வே நிம்பர் 400—1 ஏக்கர் 2 செண்டு 49.

21. நத்தம் சப்டிஸ்டிரிக்கட்டு நத்தம் கிராமம் கவர்மெண்டு சாத்தப்பட்டிக் கிராமம் விளாம்பட்டி பாவில் மேல்புறம் நத்தம் பு. ப. சப்பதுமீரா ராவுத்தர் நஞ்சை கீழ்புறம் ராமு பிள்ளை வெள்ளையப்பனார் இவர்கள் புஞ்சை. இதற்குள் சர்வே 142-நிம்பர் வி லெட்டர் புஞ்சை ஏக்கர் 1 செண்டு 38. ரீசர்வே 67-3 ஏக்கர் 1 செண்டு 63.

22 சர்வே 143 நிம்பர் புஞ்சை ஏக்கர் 3 செண்டு 22-க்கு ரீசர்வே 67/1-க்கு ஏக்கர் 3 செண்டு 33.

23. மேற்படி சப்டிஸ்டிரிக்ட்டு இடைப்பட்டி கிராமம் பாவில் கீழ்புறம் மல்லன் புஞ்சையும் நத்தம் செங்கயன் செட்டி புஞ்சையும் மேல்புறம் கூனன் புஞ்சையும அதற்குள்ப்பட்ட சர்வே 92-நிம்பர் வி லெட்டர் புஞ்சை ஏக்கர் 2 செண்டு 84-ம் இதிலுள்ள புளியமரங்கள் 20-ம் ரீசர்வே நிம்பர் 56/2-க்கு ஏக்கர் 2. செண்டு 72.

24. மேற்படி இடையப்பட்டி ஊர் குடியிருப்பில் மேல்புறம் தென்வடலோடிய வீதி தென்புறம் கிழமேலோடிய வீதி கீழ்புறம் முத்துப் பிள்ளை குடியிருப்பு மனைவீடு வடபுறம் புறம்போக்கு ஊர்மந்தை இதற்குள்ளான மேற்படி ஜாதியடி 34. மேற்படி ஜாதியடி 120 உள்ள மனையிடத்தில் கட்டியிருக்கிற கூரைக்கட்டு வடக்குப்பார்த்த வீடும். தெற்குப்பார்த்த கொட்டம், வாசல், முத்தம், கொல்லை வகையரு அடங்கிய மனை 1-ம்.

சிவகெங்கை 29—4—30 } P. Sankaraiyer. Pleader.

## செய்தித்திரட்டு.

### ரெங்கூன் கலகம்.

#### இந்திய வர்த்தகர் கஷ்ட நிவர்த்தி நிதி

ரெங்கூன் கலகத்தில் கஷ்டமடைந்தவர்களுக்கு உதவி செய்ய பர்மா இந்தியவர்த்தகர்சங்கம் கஷ்டநிவர்த்தி நிதி சேகரித்து வருகின்றது. அதற்கு நன்கொடை அளிக்குமாறு வேண்டுகோள் வெளியிட்டிருக்கின்றது. போக்கிரிகள் வீடுகளை கொளுத்திவிட்டமையால் ௨௫௦௦௦ பேர் வீடில்லாது திண்டாடுகின்றனர் என்றும் ௪௦௦பேர் காயமடைந்துள்ளார்கள் என்றும், ௨௦௦ பேர் இறந்துள்ளார்கள் என்றும் பத்து லட்சம் மதிப்புள்ள சொத்து சேதமடைந்துள்ளது என்றும் சங்கம் மதிப்புப் போட்டிருக்கின்றது. நன்கொடைகளை ரெங்கூன் செண்டிரல் பேங்கிக்கு அல்லது இந்தியாவிலுள்ள அதன் கிளைக்கு ரெங்கூன் கலகக்கஷ்டநிவர்த்திநிதி பர்மா இந்தியர் வர்த்தக சங்கம என்னும் விலாசமிட்டு அனுப்ப வேண்டும்.

ரெங்கூனில் வழக்கமாய் இருக்கும் அமைதி ஏற்பட்டுவிட்டது. துறைமுக வேலையும் வழக்கம்போல் நடைபெறுகின்றது.

### சுபராஜ்யத்தைப்பற்றிய ஜோஸியம்.

ஜூன் ௧௫-ந் தேதியிலிருந்து ௨௫-ந் தேதிக்குள் காந்திஜி சிறையிலிருந்து விடுதலை செய்யப்படுவாரென்று டி.வி.ராஜப்ப ராஜூவும் இந்தியா அடுத்தஆண்டு மத்திக்குள் குடியேற்ற நாட்டந்தஸ்து அடையுமென்று பண்டித ஐ. வி. ஆர். சர்மாவும் ஜோஸியம் கூறுகின்றனர்.

### ஆஜ்மீரில் பூகம்பம்.

அஜ்மீரில் ௫-வினாடிகள்வரை பூகம்பம் ஏற்பட்டுப் பெரும்பொருட் சேதம் விளைவித்தது. ஆனால் உயிர்ச் சேதமெதுவுமில்லை.

### மகாத்மாவைப் பார்க்க உத்தரவில்லையாம்.

ஸ்ரீ மதுராதாஸ் தாரிகப்ஜி ஸ்ரீமதி மீராபென், ஸ்ரீமதி காப்டன் ஸ்ரீ ரெயினால்ட்ஸ் முதலியோர் மே ௩௦-ல்மகாத்மாவைக் காணச்சென்றார்கள். ஜயில் சூப்பரண்டு ஸ்ரீமதி காப்டனை அனுமதிக்க மறுத்துவிட்டார். ஸ்ரீ ரெயினால்ட்ஸ் மகாத்மாவைப் பார்க்க அனுமதிக்கக் கூடாதெனத் தமக்கு விசேஷ உத்தரவு வந்திருப்பதாகவும் ஜயில் சூப்பரண்டுதெரிவித்தார்.

### ஷோலாப்பூருக்குத் தொண்டர்கள்.

ஷோலாப்பூரில் தேசியக் கொடிக்குத் தடையாயிருந்துவரும் ராணுவச் சட்டத்தை மீறும்படி பம்பாய் பூனா முதலிய விடங்களிலிருந்து சிறு சிறு கூட்டமாகத் தொண்டர்கள் ஷோலாப்பூருக்கு வந்துகொண்டிருக்கின்றார்கள். அவர்களைப் போலீசார் ஷோலாப்பூருக்கு வரவிடாமல் ரயில்வே ஸ்டேஷனிலேயே தடுத்துவைத்து அடுத்த ரயிலில் திரும்பி அனுப்பிவிடுகின்றார்கள்.

### யூனியன்போர்டு அங்கத்தினர் ராஜிநாமா.

புருலியா யூனியன்போர்டு அங்கத்தவர்களும் உத்தியோகஸ்தர்களுமாக மொத்தம் ௨௦-பேர் சர்க்கார் அடக்குமுறையைக்கண்டிக்கும் பொருட்டு தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்திருக்கின்றார்கள்.

### ஓர் வீரத்தாயின் ஊக்கம்.

புருலியா ஜில்லாப்போர்டுத்தலைவரும் மாஜி சட்டசபை அங்கத்தவருமான திரு. ஜனதபவான் சேனும் இன்னும் பல பிரபலஸ்தர்களும் கிரிமினல் சட்டத்தின் ௧௦௭-வது பிரிவின்படி ஜாமீன்கொடுக்க மறுத்ததால் போலீசார் ஜூன் ௨-தேதி கைது செய்தார்கள்.

ஸ்ரீ சென்னின்தாயும் மனைவியாரும் அவர் விட்டுப்போன காங்கிரஸ் வேலையை முடித்துவைக்க கங்கணம்கட்டி வெளிவந்திருக்கின்றார்கள்.

### தபால் கொள்ளை.

ஜூன் ௨-ந் தேதி ஒரு தபால்ஓவர்சியரும் ஒரு கூலியும் ரொக்க ரூ. ௨௭௦௦-ஸ்வர்ணகிரம் தபால் ஆபீஸிலிருந்து எடுத்துக்கொண்டு திகிர்பாருக்குச் சென்றார்கள. அவர்களை முல்ஜார்தங்கிபாரில் ஜனச் சந்தடியில்லாத தனியான ஓர் இடத்தில் திடீரென ஐந்துபேர்கள் வந்து தாக்கினர். வந்த ஐவரும ஓவர்சியர்தலையிலும் கூலிதலையிலும் இரும்புக்கம்பியால் அடித்துப் படுகாயப் படுத்திவிட்டனர். எனவே அவர்கள் கூக்குரலிட பக்கத்துஜனங்கள் ஓடிவந்தார்கள். அதற்குள் ௧௦௦௦-ரூபாய் இருந்த ஒரு பையுடன் கொள்ளைக்காரர்கள் காணப்படவில்லை.

### திருநெல்வேலிகதர் சங்கம்

கதரை அதிகமாக உற்பத்திசெய்யும் நோக்கத்தோடு பங்கு ஒன்றுக்கு ௧௦ ரூபாயுள்ள ௧௦௦௦ பங்குகள் கொண்ட ஒருகதர் அபிவிருத்தி சங்கம் திருநெல்வேலியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

### டாக்கா ஜட்ஜ் உத்தரவு.

டாக்கா ஜில்லா ஜட்ஜ் எல்லா வக்கீல்களையும் கட்சிக்காரர்களையும் கோர்ட்டிற்கு வரும்படியும் வாராவிட்டால் அவர்களில்லாமலே வழக்கிற்குத் தீர்ப்புக் கூறப்பட்டுவிடுமென்றும் ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கின்றார். வக்கீல் சங்கத்தலைவர் ஜட்ஜிற்கு நகரில் அமைதி ஏற்படும்வரை எவ்வித உத்தரவும் பிறப்பிக்கப்பெறுவது நேர்மையாகாதென்று காட்டி ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

டாக்காவில் தினமும் பலர் கைது செய்யப்படுகின்றனர். வீதிகளில் இன்னும் ஜனநடமாட்டமில்லை.

### கள்ளுக் கடை மறியல்.

ஜூன் ௫-உ காலை ௮ மணியிலிருந்து இரவு ௮ மணிவரையிலும் கல்கத்தா கிராஸ் தெருவில் ௨௦ காங்கிரஸ் தொண்டர்களும் ௪௦ ஸ்திரீ தொண்டர்களும் கள்ளுக்கடை மறியல் செய்தனர். ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். போலீசார் தொண்டர்களைச் சூழ்ந்திருந்துகொண்டு அவர்களைத் தாக்கினார்கள். பல கடைகள் மூடப்பட்டன.

### அ. இ. கா. கமிட்டி மெம்பர் திரு. ஹக்கிம்தீர்மானம்.

பெஷவார் கலகத்தைபற்றி விசாரணைசெய்துவரும் திரு. படேலின் முன் அகில இந்தியக்காங்கிரஸ்கமிட்டி மெம்பரான திரு. ஹக்கிம் சாட்சியம் கூறி முடிப்பதற்குள் இருமுறை கண்ணீர் வடித்தாராம். கண்ணீர் வடித்துவிட்டு, பிரிட்டீஷார் ஒன்றுமறியாத மக்களுக்கு இழைத்துவரும் அநியாயங்களையும், மிருகத்தனமான செயல்களையும் தம்மால்கண்டு சகித்திருக்க முடியாதென்றும்ஆகவே தாம் தம் பந்துக்களுடன் காஷ் மீரத்திற்குப் போக தீர்மானித்திருப்பதாகவும் கூறினர்.

### அமெரிக்காவுக்கு செய்தித்தடை

சில நாட்களுக்கு முன் பத்திரிகை நிருபர் "டைம்ஸ் அப் இந்தியா" விலிருந்து போலீசாரால் காயப்படுத்தப் பட்டவர்களின் தொகையைக்குறித்து ஓர் அமெரிக்கன் பத்திரிகைக்கு அனுப்பினர். இத்தொகை ஆங்கிலேயர்கள் தம்நாட்டில் வெளியிட்டுள்ள தொகையைவிட பெரிதாக இருந்ததால் அச்செய்தியை அமெரிக்காவுக்குக் கொடுக்கவில்லை.

### ஆனந்தவிகடனுக்கு ஜாமீன்.

"ஆனந்தவிகடன்" "ஆனந்தவாசினி" என்று திரு. எஸ். எஸ் வாசனால் சென்னையிலிருந்து வெளியிடப்படும் தமிழ் தெலுங்குப் பத்திரிகைகட்கு தலா ௧௦௦௦-ரூ. வீதம் ஜாமீன் கட்டும்படி நோட்டீஸ் விடப்பட்டிருக்கிறது. ஜாமீன் கட்டும்வரை அவை இரண்டும் நிறுத்திவைக்கப் பட்டிருக்கின்றன.

### நெல்லூர் தலைவர்கட்கு தண்டனை.

நெல்லூர் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டித்தலைவராகிய திரு. நல்லபல்லி ராம, சுப்பையா, திரு. வெங்கிடசுப்பையா திரு. சீதாராம ரெட்டியார் இம்மூவருக்கும் மாஜிஸ்திரேட் தலா ௬ மாதக் காவல் தண்டனையும் ௫௦ ரூ அபாராதமும் செலுத்தத்தவறினால் மீண்டும் ௩ மாதக் காவல் தண்டனையும் விதித்தார்.

### தொண்டர்களைக் காட்டுக்குக்கொண்டுபோயினர்

ஷோலாப்பூரில் இராணுவ அமுலின் கீழ் தேசியக் கொடி பிடித்துச் செல்லலாகாதென்றிருக்கும் சட்டத்தை ரத்துசெய்யும் நோக்கத்தோடு பல தொண்டர்கள் அங்கு போய்க்கொண்டிருக்கின்றனர். திரு. ஈ. சி. போட் சனிக்கிழமையன்று ௧௫-சத்தியாக்கிரகிகளுடன் சட்டாராவிலிருந்து சோலப்பூர் புறப்பட்டுச் சென்றார். அவர்கள் திங்கட்கிழமை பில்ஜிஸ்டேஷன் போய்சேர்ந்ததும் அவர்களை கைதுசெய்து சோலாப்பூருக்குக் கொண்டுபோய்விட்டனர். ஐந்து சத்தியாக்கிரகிகளை திரும்பப்பூனாவிற்கும் அனுப்பிவிட்டுமற்றையோரை காட்டிற்குக் கொண்டுபோய் அங்குவிடுதலை செய்துவிட்டதாக வதந்திஉலவுகின்றது.

### கப்பலில் தீ.

#### ௪௦ பேர் மாண்டனர்.

மாக்டலீனா நதியில் சென்றுகொண்டிருந்த 'கோயங்கா' கப்பலில் தீ யொன்று தீப்பற்றியதினால் ௪௦ பேர் மாணமடைந்தார்கள். அநேகருக்கு காயமேற்பட்டது.

### மேஜைக்குள் நாகம்.

உதகமண்டலத்திலுள்ள கொடேல் என்ற இடத்தில்வசிக்கும் ஒரு ஐரோப்பிய மாது தன் மேஜையைத் திறந்ததும் அதற்குள்ளிருந்து ஒரு நல்லபாம்பு சீறிக்கொண்டு வெளிவந்தது. அப்பெண் திகைத்து அலறிக்கொண்டு ஓட அடுத்தவீட்டு மிஸ்டர் ஓயிட் என்பவர் ஓடிவந்து அதனைச் சுட்டார்.

### அமனுல்லா ஏமாற்றப்பட்டார்.

ஆப்கான் மாஜி அரசர் அமனுல்லா தற்போது குடியிருக்கும் வீட்டைவிலைக்குவாங்குவதற்காக பல விலையுயர்ந்த முத்துகளையும் நகைகளையும் ஒரு இத்தாலிய நகை வியாபாரியிடம் கொடுத்தாராம். ஆனால் அவை திருட்டுப்போயின. இத்தாலிய போலீசார் கடைசியில் அவைகள் ஒரு பாக்டரியினுள் புதைக்கப்பட்டிருப்பதாகக் கண்டுபிடித்தார்கள்.

### தீ விபத்து.

லண்டனிலுள்ள தேம்ஸ் நதிக்கரையிலுள்ள ஒரு ஸ்டோரில் மாலை ௬ மணிக்குத் தீப்பற்றி இரவு ௩-மணிவரையிலும் எரிந்தது. தீயணைக்கும் இயந்திரங்கள் பல வந்து வேலைசெய்தாலும் பயன்படவில்லை. ௧௦௦௦-க்கணக்கான ஜனங்கள் அதனை வந்து பார்த்தார்களாம்.

### வெடிமருந்துத் திருட்டு.

கராச்சி நகர ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஹைதராபாதிற்குப் போகத் தயாராயிருந்த ஒரு ரயில்வண்டியிலிருந்து வெடிமருந்தை யாரோ திருடிக்கொண்டு போய்விட்டார்கள். போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.









### மலாய்நாட்டுச் செய்திகள்.

நடந்த ௧௯௨௯-ம் வருடத்து தொழில் இலாகா வருடாந்த அறிக்கையில் காணும் சில குறிப்புகள்:—

சென்ற 1929-ம் ஆண்டில் தென்னிந்தியாவினின்றும் மலாயாவுக்கு வந்தவர்களின் தொகை 114252. முந்தின 1928-ம் வருடத்தைக்காட்டிலும் 51180 பேர்கள் சென்ற ஆண்டில் அதிகமாக வந்ததாகப் புள்ளி விபரங்கள் கூறுகின்றன. இவர்கள் யாவரும் பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியாருக்குச் சொந்தமான கப்பல்களிலேயே வந்தனர். 82,183 பேர் கூலி வகுப்பைச் சேர்ந்தவர்கள். மீதம் 32069 பேர்கள் வியாபாரிகளும் கிராணிகளும் மற்றும் உயர் வகுப்பைச் சேர்ந்தவர்களுமாவர். கூலி வகுப்பு ஜனங்களுக்கு இந்தியன் இமிகிரேஷன் கமிட்டியின் நிதியிலிருந்து கப்பல் கூலி ரயில் சத்தம் முதலியனக் கொடுக்கப்பட்டன. ஆனால் வியாபார வகுப்பைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய கட்டணங்களைத் தாங்களே செலுத்திவந்தனர்.

மலாயா நாட்டைவிட்டுச் சென்ற வருடத்தில் 76,649 இந்தியர்கள் திரும்பத் தாய்நாட்டிற்குச் சென்றனர். இவர்களில் 6,731 பெயர்களைத் தவிர மற்ற யாவரும தங்களுடைய சொந்தச் செலவிலேயே சென்றனர். இந்த 6,731 பேர்களும் உடல் வலிமை இழந்து வேலை செய்யச் சக்தியற்று மலாய் நாட்டில் இருக்க யோக்கியதையற்றவர்களாய்ப் போனவர்கள். பொருள் திரட்டும் நோக்கங்கொண்டு நல்ல திடசரீரத்துடன் இந்நாட்டிற்குவந்துவிட்டு மலேரியா, பெரிபெரி, கொக்கிப் புழு முதலியன போன்ற பயங்கர வியாதிகளைச் சம்பாதித்துக்கொண்டு உடல் வலிகுன்ற நடைப்பிணங்கள் போன்று போய்விட்டமையால் தோட்டங்களில் வேலை செய்ய லாயக்கற்று இந்தியன் இம்மிகிரேஷன் செலவில் இந்தியாவுக்குத் திரும்பி தங்கள் பாக்கி ஜீவிதகாலத்தைக் கழிப்பதற்கு அனுப்பப்படுபவர்கள். இவர்களில் மேஜர்கள் 5323, மைனர்கள் 1408. இவர்களுக்காக 161683 வெள்ளி அதாவது 242526 ரூபாய் கப்பல் கேழ்வு ரயில் செலவு முதலியவைகளில் செலவழிக்கப்பட்டது.

#### கங்காணி லைசன்ஸ்.

1928-ம் வருஷத்தில் தென்னிந்தியாவில் கூலிகள் திரட்டுவதற்காக 2913 கங்காணிகளுக்கு லைசன்ஸ் கொடுக்கப்பட்டிருக்க சென்றவருடம் 5312 லைசன்ஸ்கள் வரை கொடுக்கப்பட்டன. இக்கங்காணிகள் கூலி திரட்டுவதில் நெறிபிறழ்ந்து மோசம் முதலியன செய்த குற்றங்களுக்காக 417 லைசன்ஸ்கள்வரை இந்திய அதிகாரிகளிடமிருந்து வந்த சிபார்சுகளின் மேல் ரத்து செய்யப்பட்டிருக்கின்றன. இக்கங்காணிகளால் சென்ற வருடத்தில் 44314 கூலிகள் திரட்டப்பட்டு மலாயா நாட்டிற்குக் கொண்டுவரப்பட்டனர். இவர்கள் படும் பிரயாசைக்காக இவர்களால் திரட்டப்படும் நபர்களில் ஒவ்வொரு தனி நபருக்கு 10 வெள்ளி வீதமும் விவாகமான குடும்பஸ்தர்களுக்குத் தலா பத்து வெள்ளி வீதமும் பிரமசாரிக்கு 8 வெள்ளி வீதமும் போனஸ் கொடுக்கப்படுகிறது. ஒரு கங்காணி 10 ஆடவர்களையும் எட்டு ஸ்திரீகளையும் எவ்விதத்திலேனும் சட்டங்களுக்கு உட்பட்டு மலாயாவுக்குக் கூட்டிக் கொண்டுவந்து சேர்த்துவிட்டால் சுமார் 150 முதல் 200 வெள்ளிவரையில் போனஸ் பெறக்கூடும். இவ்விதம் வருமானம் கிடைப்பதால் ஏழைப் பாமர மக்களை பல கொடியர்கள் ஏமாற்றி அழைத்து வருவதையே தொழிலாக ஏற்படுத்திக் கொண்டிருக்க இடமேற்படுகிறது.

இன்னும் வேலையில்லா இந்தியர்களுக்காக கோலாலம்பூரில் ஒரு சாணுவயமும் பினாங்குக்கருகில் சுமார் ஏழு மைல் தூரத்தில் கம்பங்பாரு என்னுமிடத்தில் ஒரு சாணுவயமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்தியன் இமிகிரேஷன் கமிட்டியின் நிதியினின்றும் இவற்றிற்குத் திரவியம் அளிக்கப்படுகிறது. வேலையின்றித் தவிக்கும் இந்தியர்களுக்குத் தங்க இடமும் உணவும் இலவசமாக இதில் அளிக்கப்படுகிறது. பினாங்கு சாணுவயத்தில் சென்ற ஆண்டில் 1955 பேர்களும் உதவி பெற்றனர். இவர்களில் முறையே 543-பேர்களும் 1099-பேர்களும் வேலை செய்ய சக்தியற்றவர்களென்று நிரூபணமாக்கப்பட்டு இந்தியாவுக்குத் திரும்பி அனுப்பப்பட்டனர்.

#### கூலிகளின் பொருளாதார நிலைமை

இந்தியக் கூலிகள் தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்கியில் பணம் போட்டுவைப்பதைப்பற்றியும், பொதுவாக அவர்கள் மீதம் பிடிப்பதைப்பற்றியும் கூறப்பட்டிருக்கிறது கூலிகள் பேரில் தபாலாபீஸ்களில் 11605 கணக்குகள் திறக்கப்பட்டன. இவையெல்லாவற்றிலுமாகச் சேர்ந்து 939503வெள்ளி போடப்பட்டது. மற்றும் 45139 கூலிகளால் 3,636 983 ரூபாய்வரை இந்தியாவுக்கு மணியார்டர் மூலம் அனுப்பப்பட்டது. இன்னும் பலர்ரொக்கமாகவும் தாங்கள் செல்லும்போதுடன் எடுத்துச்சென்றனர், அது இவ்வளவென்பது கூறுவது சாத்தியமில்லை.

#### கூலிகளின் சம்பளம்.

கூலிகளின் சம்பளம் மாகாண வாரியாக வெவ்வேறாயிருக்கிறது. வெல்லஸ்லி மாகாணத்தில் ஆண்களுக்கு நாள் ஒன்றுக்கு 58 காசும் ஸ்திரீகூலிகளுக்கு 46 காசுவீதம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. வெல்லஸ்லி மாகாணத்தில் 1928-ம் ஆண்டுமுதல் இன்னும் முறையே 50, 40 காசாக கிரணிக்கப்பட்டிருக்கிறது. பாஹாங், ஜோகூர், கெட்டா, கெலந்தான் முதலான காட்டுப் பிரதேசங்களில் 60 முதல் 80 காசுவரையில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கூலிகள் ஆயிரக்கணக்கான மைல்கள் தாண்டிக் காட்டுப் பிரதேசங்களிலும், துஷ்ட மிருகங்கள் நிறைந்த இடங்களிலும் மலேரியா விஷஜுரம முதலிய வியாதிப்பரவியிருக்குமிடங்களிலும் கஷ்டப்பட்டு நோய்வாய்ப்பட்டு உழைப்பதை யோசிக்குமிடத்து இந்தச் சம்பளம் வெகு அற்பமானது.

இந்தியாவில் இவர்கள் கவுரவமான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தவர்களாகயிருக்கலாம். வாழ்வினைப் பலனுல் அதிகம் பொருள்தேடும் நோக்கத்தால் கங்காணிகள் வலையில் சிக்கி இங்கு போந்து உடல்வலிகுன்றி எவ்விதத் தொழிலுக்கும் உபயோகமற்றவர்களாய் இந்தியாவில் உள்ள உறவினர்களைச் சார்ந்து உயிர்வாழ வேண்டியவர்களாகப் போய்விடுகின்றனர். சென்ற ஆண்டில் இவ்விதம் உபயோகமற்றவர்களென்று சுமார் 6500-பேர்களும் அதற்குமுந்தின வருடம் சுமார் 18000-பேர்களும் அனுப்பப்பட்டிருக்கின்றனர். இவ்விதம் வருடந்தோறும் திரும்பி வருகிறவர்கள் ... தக்கதொரு உபாயம் தேடவேண்டியது அவசியமாகும்.

#### உபசார விருந்து

சுபோ நகரத்து நகைவணிகப் பிரமுகரான ஸ்ரீமான்செட்டியப்பச்செட்டியாருக்கு அரசாங்கத்தாரால் ஜே. பி. பட்டம்அளிக்கப்பட்டதை முன்னிட்டு அவரைப்பாராட்டுவதற்காக ஒரு தேநீர்ச்சேரியை சுபோ நகரத்தார்கள் ௨௪-௫-௩௦ல்சப்போட வுன்ஹாலில் நடத்தினர்கள் ஸ்ரீமான்சிதம்பரம்செட்டியார் அக்கிராசனம் வகித்தார். கிந்தா ஜில்லா அதிகாரி உட்பட பல ஐரோப்பியர்களும் பத்திரிகா நிருபர்களும் வந்திருந்தனர். இந்தியக்கனவான்களும் பலர்வந்திருந்தனர். சிற்றுண்டிகள்வழங்கப்பட்ட பின்னர் கூட்டம் ஆரம்பமாயது. செட்டியார்களின் சார்பாக ஸ்ரீமான் சிதம்பரம்செட்டியார் பேசியதில் கவர்மெண்டார் ஸ்ரீமான் செட்டியப்பாவுக்கு ஜே. பி. பட்டமளித்ததைப் பாராட்டினர். செட்டியாரின் மேன்மைக் குணங்களையும் அவர் அப்பட்டத்திற்குச் சகல விதங்களிலும்பொருத்தமானவரென்பதையும்நன்கு விளக்கிக் காட்டினர்.

பின்னர் ஸ்ரீமான் செட்டியப்பாவுக்குத் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக இரண்டு பத்திரங்கள் வாசித்து அளிக்கப்பட்டன. அப்போது திரு. செட்டியப்பா தனது பதிலுரையில் ... அன்று கூட்டம் கலைந்தது.

# சீர்திருத்தம்.

(நாகை அ. கோவிந்தன் எழுதுவது)

சீர்திருத்தம் என்னும் கட்டுரை வரையப்புகுவதற்குக் காரணம் இன்றைய நிலைமையில் நம்இந்தியா அடைந்துள்ள இழிவும் அதனால் ஏற்படும் பிறகேடுகளுமே யாம். நம் நாடானது செம்மை குன்றிச் சீரழிந்து வறுமையுற்று அன்னியர்க்கு அடிமைப்பட்டுக்கிடக்கிறது. அடிமைப்பட்ட நாட்டில் ஆண்மை உண்டாவது சரித்திரத் துணிவு. இந்தியாவென்பது வெறும் மண்ணைமட்டும் குறிப்பதன்று; அதன்பால்வாழும் மாந்தர், பழக்க வழக்கங்கள், நடை உடை, பாவனை, ஒழுக்கம், நாகரிகம் இவற்றினையே குறிக்கும். சிறுதுளி பெரு வெள்ளம் என்பதுபோல் பல்வேறு சிறு வகுப்பினர் ஒன்றுபட்டு வாழும் குடிமக்கள் கூட்டத்திற்கு ஒரு சமுதாயம் என்று பெயர். சமுதாயத்திற்கு, மொழி அவசியம். மொழி என்பது பாஷை; அது கலவி. அறியாமையைக் கல்லுங்கருவி. கல்வி சமுதாயமக்கள் அறியாமையாகிய மூடப்பழக்கங்களில் குருட்டு நம்பிக்கையுடன் மானமழிந்து மதிகெட்டு, மாக்களிலும் கேவல நிலையில் வந்துவிட்டார்கள். மூடப்பழக்க வழக்கங்கள் நாட்டைக் கெடுத்துவிட்டது. அதனால் அவர்கள் தங்கள் வாழ்வுப் பொருளிழந்துவறியராய் வாடுகிறார்கள். "உலகத்தில் தருமம் க்ஷீணித்து அதர்மம் மேலோங்குங் காலத்தில் நான் அவதரித்து துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம்செய்வேன்" என்பதாக பகவான் கீதையிற் கூறிப் போந்ததாகக் கேள்வி. அவ்வாறு நடந்ததாக நாம் நன்கு உணர்வதற்கில்லை. ஆனால் நேரில் கண் கூடாகப் பார்ப்பது ஒன்று உண்டு. அஃதொன்றும் யாதெனில், அதுதான் நமது சுயமரியாதைச் சுடரொளியாம நந்தாமணியென விளங்கும் செஞ்ஞாயிறு ஈரைப்பெரியார் ஈ. வெ. இராமசாமியார் ஆவர். அவர்கள் அறியாமையென்னும் ஆர்கலிநீக்கி சுயமரியாதை ஞானம் எங்கும் விளங்கவிதைவிதைத்து, முளைத்து, மரமாகி, கவடுகோடு விடுத்து, நிழல்பரப்பி, குளிர்ந்தகாற்று வீசி, மக்கள் மனத்தை ரமிக்கச் செய்து வருகிறது. அன்னார்க்கு, எனது மனப்பூர்வமாக எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி வந்து வழிவழியாக செய்து வந்த மூடப்பழக்க வழக்கத்தினை செலுத்தி, மேலேசெல்கிறேன். மக்களைச்சீர்திருத்துந்துறையில் எவர் ஒருவர்க்கும், அஞ்சா நெஞ்சத்துடன் ஆண்மையாக விட்டுக் கொடுக்காத நல்வினை ஆற்றிச் செல்லல் வேண்டும் ஒருவர் புகழுரைக்கோ இகழுரைக்கோ செவி மடுக்கும் இயல்புடையராயிருத்தல் ஒண்ணாது. நாம மதத்தின் பேரால் எவ்வளவு செலவு செய்யப் பழக்கப்பட்டிருக்கிறோம். ஹிந்து மதத்தின் பேரால் ஒரு குழந்தை பிறந்து, வளர்ந்து, வாழ்க்கை நடத்தி வயோதிக மடைந்து இறக்கிற வரையும், அதன் பின்பும் பார்ப்பனர்கட்கு நம் பொருளைக் கொடுத்து பல வழியிலும் சேவக நிலைமையில் நம் மனத்திற்கும் புத்திக்கும் ஒத்துவராதனவற்றிற்கெல்லாம் என்னமோ, ஏதோ செய்யாமல் போனால் ரௌரவாதி நரகம், செய்தால் சுவர்க்கம், கடவுள் அருகிலும், இன்னும் அவருக்குமேலுமாகக் கூட இருக்கலாம் என்பதாக நினைத்தும் அப்படியே பார்ப்பனர் தங்கள் சொந்த வயிற்றுப் பிழைப்புக்காக எழுதி வைக்கப்பட்ட சுயநலத்துக்கு நாம் அடிமைப்பட்டு கடைசியாக அவர்கள் காலைக்கழுவின நீரைக் குடித்து மந்தமதியினராக இருந்து வருகிறோம் பிள்ளை பிறந்தால்தான் மேலே சொல்லப்பட்டவை எல்லாம் செய்தாக வேண்டும்; இல்லையானால் இல்லை என்பதாக விருந்தாலும் புத் என்னும் நரகத்திலிருந்து நீக்குபவன் தன்புதல்வனே ஆதலின் எப்படியாவது ஒரு புத்திரனைப் பெற்றுத்தீர வேண்டும் என்பதாக காசி இராமேஸ்வரயாத்திரை இராமர் சீதை கல்யாணம், வேம்பரசுமணம், குளம்வெட்டுதல், கோயில் கட்டுதல் இவைபோன்ற பார்ப்பனப் பிறலோகத்தபால் பெட்டியை நிரப்புவதுமே ஹிந்துமதத்தின் தத்துவமும் கொள்கையுமாக விருக்கின்றது. இவை எல்லாம் நீக்கப்பட வேண்டுமென்பதாக அரசாங்கத்தார் "அறநிலைய பாதுகாப்புச் சட்டம், என்றும், பால்ய விவாஹத் தடுப்புச்சட்டமொன்றும், விதவா மணச் சட்டம் என்றும், தாசிகள் பொட்டுக் கட்டுதல் ஒழிப்புச் சட்டம் என்றும் சட்ட நிரூபண சபைகளில் சட்டமாக்கப்பட்டால் அரசாங்கத்தார் மதத்தில் பிரவேசித்து விட்டார்கள், ஆதலின் முடிமுழுகிப்போய்விட்டது என்று கூப்பாடுபோடுவதும், வடகலை தென்கலைச்சண்டையும், தீர்த்தச்சண்டையும், ஒரு சாமியைக்கண்டால் ஒரு சாமிக்குபார்வை தோஷமும், அதனால் காப்பும் பிணக்கும், அடிதடிகளும் குட்டிக்கலகங்களும், இவற்றினைத்தீர்க்க அன்னியர் ஆட்சியின் வேறுமதத்தின் ஒரு நீதிபதியால் தீர்ப்புக் கோருவதும், அவர்கட்கு ஹிந்து மதத்தைப் பற்றி ஒன்றுந்தெரியாது விதிப்பதுமான இந்நிலைமையில் இருக்கின்றது. ஒரு நூறு ஆண்டுகட்கு முன்னர் இராஜாராம் மோஹன்ராய் என்றும ஒரு சீர்திருத்தக்காரரிருந்தார். அவர்களால்தான் "சதி" என்னும் புருடன் இறந்தால் மனைவியையும் உயிருடன் வைத்துக் கொளுத்தும் "உடன்கட்டை ஏறுதல்" என்னும் கொடியவழக்கம் இங்கிலாந்துவரை சென்று மஹாபிராயசையுடன் சட்டமாக்கப்பட்டுத் தடுக்கப்பட்டது. ஹிந்துமதத்தின் கர்த்தாவானகடவுள் ஒருவர் இருந்து உடன்கட்டை ஏறுதல் வேதத்தில் உள்ளது, வேதமே நான், உடன்கட்டை ஏறத்தான் வேண்டும் என்று சொன்னாரா? அப்படியிருந்தால் இன்னும் நடந்துவர வேண்டுமே?

ஆதலால் "சதி" யால் ஹிந்துமதம் அழிந்துவிடவில்லை. ஆகலான் எத்தனைச் சட்டங்கள் மக்கட்கு அநுகூலமான வழியிலும் நாகரிகத்துறையிலும் செய்யப்பட்டாலும் அதனாலெல்லாம் ஹிந்து மதம் அழிந்துவிடுவதற்கில்லை. இவை எல்லாம உத்தேசித்தே மூடப்பழக்க வழக்கங்களை ஒழித்துத் தீர வேண்டும். அவ்வாறு ஒழித்தால்தான் நாடும் சமூகமும முன்னேறும். பிறநாட்டைப்பாருங்கள். ஜப்பான் பாரிஸ், சைனா, ஈஜிப்ட், ஜர்மனி இத்தாலி, துருக்கி, ருஷியா நாடுகளை நோக்குங்கள். அங்கெல்லாம் மாணாக்கர்கட்கு நல்லறிவு போதிக்கிறார்கள். அவர்களே இப்போது நாட்டைஆளுந் திறன் படைத்திருக்கிறார்கள். ஆங்கெல்லாம் பெண்மக்கட்கு உரிமையுண்டு. சமத்வம் உண்டு, ஓட்டுரிமையும் உண்டு. ஆனால் ஏழை இந்தியாவிலே எல்லாம் மதம்; எல்லாம் கடவுள் சொன்னது. கடவுள் வாக்கு. அப்படிச் செய்திடுவார். இப்படி செய்திடுவார் என்பதாகப் பிறரை மாற்றி வயிறு பிழைக்கும் ஒரு கூட்டத்தார்க்கு அதுவும் ௧00-க்கு ௩ உள்ள ஒரு கூட்டம் நம்மை, 'ஒன்பது பேர் உழைக்க ஒருவர் உண்டு மகிழ,' என்பதுபோல் உண்டு உடுத்தி ஏப்பமிட்டுக் கொண்டுவருகிறது. ரஷ்யாவிலே இப்பொழுது மாதர் கோவில்களும், மசூதிகளும், மடாலயங்களும் சத்திரங்களும் சாவடிகளும் காலியாக்கப்பட்டு அவையெல்லாம சிசு சம்ரக்ஷணசாலைகளாகவும், அநாதைப்பிள்ளைகள் ஆதரிப்பு நிலயங்களாகவும் விஞ்ஞானசாத்திரம்பயிலும் பள்ளியாகவும் மாறிவிட்டன. களியாட்டயருங்கபவ வரும் வீணரும் ஆங்கில்லை. ஆண்களும் பெண்களும் சமத்வம். இந்தியாவில் ஹிந்துமதத்தில் கல்வி, செல்வம் இரண்டும் தெய்வங்கள். அதாவது முறையே சரஸ்வதியும், இலட்சுமியும். அப்படியிருந்தும் படிப்பும் பொருளும் இங்கு இல்லை, இவைகளை ஆங்லேயர் அனுமதித்தும அங்கு ௧00-க்கு ௯0 பேர் படித்திருக்கிறார்கள். இங்கே ௧00 க்கு ௭ கூட இல்லை. முதன் முதலாக கிராமச்சீர்திருத்தம் வேண்டும். கட்டாயக் கல்வி (அதுவும் இப்போதிருக்கும் கடவுள் மதபாடங்கள் முற்றிலும் ஒழியவேண்டும) விவசாயம் கூட்டுறவு, சுகாதாரம் இவைகளை வளரச்செய்தல் வேண்டும். அப்படியானால் சமுதாயம் ஒற்றுமைப்படும். அதன் மூலம் செல்வம் அபிவிர்த்தியடையும்; பிணக்கும், காழ்ப்பும் இரிந்து ஓடும். இவை நிற்க, ஆப்கன் நாட்டைப்பற்றி ஆராய்வோம். குடிகட்கு அல்லவை நீக்கி நல்லவை செய்யப் புகுந்த அரசர் அமானுல்லா வீரர் அரசு துறக்க நேர்ந்ததற்கு மதமும் கடவுளுமே காரணம். கடவுள் பெயராலும் மதத்தின் பேராலும் பாதிரிகளும் முல்லாக்களும், புரோகிதர்களும் அரசரை வெறுக்க மண்பதையிடத்தில் (பாமரமக்களிடத்தில்) தவறான பிரசாரம் செய்துவந்தார்கள். அதன்பயனாய் உள்நாட்டுக் கலகம் விறிட்டெழுந்து முடிவில் அயல்நாடு சேர்ந்துவிட்டார் அரசர் அமானுல்லா வீரர். இதிலிருந்து நாம் உணர்வது என்ன? "சுயராஜியம் கிடைத்தபின் சீர்திருத்தம் செய்து கொள்ளலாம்" என்று தேசிய வாதிகளில் பலர் சொல்வது முற்றிலும் தவறு என்பது. வெள்ளிடை மலை என விளங்குகிறது ஆதலின் சீர்திருத்தம் முதலில் வேண்டும். எங்கணும் "சுயமரியாதைச் சங்கங்கள்" நிறுவி மக்கட்குப் பகுத்தறிவு உண்டாகுமாறு செய்து மக்கள் பசிப்பிணி நீங்கிப் பிறதேசத்தார் மதிக்க வாழச் செய்வதே மேல் எனக் கொண்டு பணியாற்றல் வேண்டும். நன்றே செய்தல் வேண்டும். அதும் இன்றே, மற்றும், இன்னே செய்தல் வேண்டும்

---

## ஆசியாவின் எழுச்சி.

சமீபத்தில் சர்வதேசச் சங்கத்தில் இத்தாலிய பிரதிநிதியாகவிருந்து வந்த ஸிக்னார் ஷியாலோஜா ஸெனேட் சபையில் பேசுகையில் கூறியதாவது. –உலகிலேயே எல்லா பாகங்களிலும் அரசியல் நிலைமைமாறுபட்டு வருகிறது. இங்கிலாந்து இதுவரையில் உலகில் வகித்துவந்த பதவியை இனியும் வகித்துவருவதென்றிருந்தால், அது ஒருக்காலும் கப்பற்படையில் மற்ற தேசங்களுடன் சமத்துவத்துடனிருக்கச் சம்மதித்திருக்காது. இப்பொழுது அரசியல் நடவடிக்கைகளுக்கு ஆசியாவே மத்தியஸ்தலமாகிவருகிறது. சீனாவிலுள்ள ஏராளமான ஜனங்களிடையே மிகுந்த தேசிய உணர்ச்சி ஏற்பட்டிருப்பது மற்ற ஆசியா தேசங்களுக்கு மேற்படவிருக்கும் உணர்ச்சிக்கு முன் சாதகமாகவேயிருக்கிறது ஆகவே எதிர்காலத்தில் இதுவரையில் நாம் அறியாத பிரச்னை ஆசியாவில் ஏற்படப்போகிறது. ஜப்பானையும் நாம் மறந்துவிடக்கூடாது. ஜப்பான் சம்மதியில்லாது இங்கிலாந்தோ அமெரிக்காவோ கப்பற்படை விஷயத்தில் எவ்வித முடிவும் செய்வதற்கில்லை. இந்த இரண்டு தேசங்களும் ஜப்பான் விஷயத்தில் அவளிக்குத் தாராளமாகவும் உள்ளூர விரோதமாகவுமே இருக்கின்றன.

---

## ஸத்தியாக்கிரஹ இயக்கம்.

### முறிந்து போகும்வரை ராஜி இல்லை.

'இந்தியன் டெயிலி மெயில்' பத்திரிகையின் ராஜ்ய நிருபர் எழுதுவதாவது– இந்தியாவிலுள்ள முட்டுக்கட்டை போட்டாற்போன்ற நிலைமையை முடிவுக்குக்கொண்டுவர தொழிற்கட்சி கவர்ன்மெண்டார் விரும்பியபோதிலும் இந்திய கவர்ன்மெண்டார் கையாளும் முறையை நிர்ணயிக்கும்பொறுப்புடையவர்களுக்குக் காங்கிரஸின் ராஜிபேசும் உத்தேசம் இல்லையென்று எனக்குத் தெரிகிறது. இந்தியா கவர்ன்மெண்டின் பிரபல மெம்பர் ஒருவர் 'இந்தியில் ராஜியத்துறையில் ராஜிசெய்துகொள்ள வேண்டி வந்தாலும் நாங்கள் காங்கிரஸ் இயக்கம் அடியோடு முறியடிக்கப்படும்வரை ராஜிபேச உத்தேசிக்கவில்லை' என்று கூறுகிறார். லார்டு இர்வின தற்காலமுறைக்குப் பூரண சம்மத மளித்திருக்கிறார். இன்னும் அதிகமான அடக்குமுறைகள் கையாளப்படுமென நான் எதிர்பார்க்கின்றேன். பம்பாய் மாகாணத்தின் பெரும் பகுதியில் ராணுவ ஆட்சியை ஏற்படுத்துவதன் அவசியத்தைப்பற்றியும் உள்நாட்டிலாகாதார் ஏற்கனவே வாதித்துக் கொண்டிருப்பதாக நான் நம்புகிறேன். சில உத்தியோகஸ்தர்கள் தேசிய இயக்கத்தைத் தோற்கடிப்பதற்காக கவர்ன்மெண்டார் முஸ்லீம்களது ஆதரவை நம்பியிருக்கின்றனர் என்று தங்களை அறியாமலே வெளிப்படுத்திய ரகசியம் இன்னும் அதிக வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது.

---

# தாதுபுஷ்டியில் மன்மதனுக்கு ஒப்பாவீர்கள்.

நீங்கள் என்றுமழியாத இளமைப்பருவத்தை அடைய வேண்டுமானல் பழனி, ஆர். எம். கே.

# தங்கபஸ்பம்

## நாசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

**தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லே.**

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளேயில் கொடுக்கும் பலனேப்பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச்செய்து விடுகிறது.

**தாதுபுஷ்டியில் மன்மதனேவெனமயங்குவார்கள்.**

இதிலமைந்திருக்கும் ஓர்ரகசியம் அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலே மாலே நோய்பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதைக் கட்டி வீரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பி வரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பதுமகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச்செய்கிறது, தாதைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்தப்பருவங்களில் அடைய வேண்டிய காலத்திற்குமுன் அடைந்த விபரீதங்களே நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமை படையச் செய்வதில் பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளே, இருமல், கஷ்டசுவாசம், கோளே, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித காமவியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும். வீரியத்தைக் கெட்டிப்படுத்தி ஆண்மைக்குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்குமிஞ்சின ஔஷதமில்லே. 100-நாளேக்கு தங்கபஸ்பமும் நாசிங்க லேகியமும் ரூ. 100. 50 நாளேக்கு ரூபாய் 50. 25. நாளேக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபா 2-ம் சேர்த்து முன்பணம் அனுப்பவேண்டும்.

### நற்சாக்ஷி.

நான் உட்லேண்டு ஸ்டேஷன் மாஸ்டர் மூலமாய் தங்களிடமிருந்து நாசிங்க லேகியமும், தங்க பஸ்பமும் சாப்பிட்டதில் இப்போது புதிய பலம் அடைந்திருக்கிறேன்.

S. Jesudasan, Railway Overseer, Woodlands, Singapore

### புத்திரசந்தானம் உண்டாகிவிட்டது.

நற்சாக்ஷி:—எனக்கு விவாகம் நடந்து ஆறுவருடம் வரை புத்திரசந்தானமில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும் நாசிங்க லேகியமும் தருவித்து 25-நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து புத்திர சந்தானமுண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோத முன்வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தேவஔஷதங்கள் என்று சொல்வதுமிகையாகாது. சரீர திடத்தையோ, புத்திக்கூர்மையோ, மன மகிழ்ச்சியையோ, மேலாய புத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம்மருந்துகளே வாங்கிச்சாப்பிட்டால் நினேத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள் நீண்ட ஆயுளேப் பெற்று வாழ எல்லாம் வல்லபிரான் இன்னருள் புரிவாராக.

(Sd) நல்லதம்பி, கட்டுப்பட்டை, சிலோன், 22-2-27.

### ஒரு அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்

1—9—24-ல் கோலாசெலங்கர் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிட்டல் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் நமது தங்க பஸ்பத்தைப் பற்றி புகழ்வதைக் கவனியுங்கள்:- அன்பார்ந்த வைத்தியஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளே அவர்களுக்கு அதிக பக்தியுடன் எழுதுவது யாதெனில், தங்கபஸ்பமும், நாசிங்கலேகியமும் இரு நோயாளருக்கு 50 நாட்களுக்கு கொடுக்கப்பட்டது. இருவரும் தங்கள்குறைகள் நீங்கி சவுக்கியத்துடனிருக்கிருர்கள். தாங்கள் அருமையாகச் செய்த பஸ்பமும்லேகியமும் யாவராலும் கொண்டாடத்தககதே. இன்னும் 100-நாள் தங்கபஸ்பமும் சாலமிசிரி அல்வாவும் ரூ50-க்கு வி. பி செய்யவும்.

P. Nagalingam Hospital C/o District, Hospital, Kualaselengor

# தாதுபுஷ்டிக்கு

## தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா.

**இழந்துபோன ஆண்மையைத் திரும்பக் கொடுக்கும் இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லே.**

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி சரீரதிடம், அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும், காமகேசரி அல்வாவும், தங்க பஸ்பமும் 100-நாள்மருது ரூபாய் 50. 50-நாளேக்கு ரூபாய் 25. 25-நாளேக்கு ரூபாய் 12—8—0

## கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை.

தாது புஷ்டிக்கு இதற்கீடு ஒன்றுமில்லே

பிரபுக்களுக்கு 100 குளிகை ரூபாய் 20. மற்றவர்களுக்கு 100 குளிகை ரூபாய் 10.

### ஒரு அஸிஸ்டென்ட்ஸர்ஜன் புகழ்வதைக்கவனியுங்கள்.

தங்களின் அருமையும் பெருமையுமான தங்கபஸ்பமும் சாலாமிசிரிலேகியமும் எனதுநோயாளி ஒருவருக்குக் கொடுத்தேன். அவரின் எத்தனேயோ விதமான நோய்கள் பஞ்சுபோல் பறந்து போய்விட்டது. இப்போது அவர் நல்ல திடதேகியாயிருக்கிருர். ஆகையால் அடியிற்கண்ட மருந்துகளே அனுப்பவும். தாம்பர பஸ்பம் 80-வேளே ரூ 40. தாளிசபத்திரி சூரணம் 40-வேளே ரூ 5. நாசிங்க லேகியம் தங்க பஸ்பம் ரூ 50. தபால் செலவு ரூ 2. ஆக ரூ 97-க்கு வி. பி. செய்யவும்.

19—1—25

மகா-ா-ா-ஸ்ரீ வைத்திய ஆசிரியாவர்களுக்கு தங்கள் மருந்துகள்யாவும் நோயாளர் யாபேருக்கும் சுகத்தையும் மனத்திருப்தியையும் கொடுத்திருக்கின்றது. தங்கள் மருந்துகளின் அருமையையும் நான் அநேகருக்கு அநுபோக அத்தாக்ஷியுடன் எடுத்துக்காட்டியிருக்கிறேன். தங்கள் மருந்துகளுக்கு சர்டிபிகேட் தேவையில்லே. மருந்துகள் தாமே தங்கள் பெயரை எங்கும் விளங்கச்செய்கின்றது. ஆகையால் தாம்பர பஸ்பம், நாசிங்க லேகியம், பவள பஸ்பம், தங்கபஸ்பம் இவைகளே வி. பி. செய்யவும்(ரூ 238-0-0-க்கு) வி. பி பார்சலில் அனுப்பியிருக்கிறது.

P. Nagalingam Hospital,C/o District Hospital, Kualaselengor.

### நற்சாக்ஷி:

### புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது

ஐயா, எனது நண்பர்களில் ஒருவர் ஆண் தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்ப்பூச்சுமருந்துகள் உபயோகித்தும், அநேகமருந்துகள் சாப்பிட்டும், கொஞ்சம்கூட குணமாகவில்லே. தங்கள் மேன்மைபொருந்தியதும், உயர்ந்த பலனேக்கொடுக்கக்கூடியதும், மதிக்கமுடியாததுமான தங்கபஸ்பம், மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்து, கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில்பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும், 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. ஷை வியாதியஸ்தர் பூறமருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூரா வையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிருர். தங்கள் ஞாபக சின்னமாக ஷை குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள்நாமத்தையே சூட்டி அழைத்து வருகிருர்.

10-1-29 V S NATANAM, Sub nspector of Police, South Arcot Dt

## வைத்திய ஆரியர்:

# ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளே

தந்திவிலாசம்: 'வேலுசாமி' பழனி. (2) சித்தவைத்தியசாலே, பழனி. S. I. Ry.

(பத்திராதிபர்) சொ. முருகப்பனால் காரைக்குடி குமரன் 'பவர் அச்சுக்கூடத்தில்பதிப்பித்து,பிரசுரிக்கப்பட்டது.

